KALKI 18.2.96 ரூ. 3.00

# கல்கி



# இளமை! இளமை!! இளமை!!!

**சாரதா’ஸ்** என்றுமே இளமைதான்!
தினம் தினம் புத்தம் புதிய ஜவுளிகளால்
தன்னை புதுப்பித்துக் கொண்டே
இருப்பதால்.

# தனிக்கட்சி அனுபவம் என்னைப் பக்குவப்படுத்தி விட்டது!

தாம் இயற்றி இசையமைத்த பாடல் காசட்டுகள், திருச்சி மாநாட்டில் ஒரு லட்சத்திற்கு மேல் விற்பனையான சந்தோஷத்தில் இருந்தார் டி. ராஜேந்தர். தி.மு.க.வின் கொள்கை விளக்கப் பாடல்கள் அடங்கிய காஸெட்கள். கட்சியாலேயே வெளியிடப்பட்டவை... டி.ஆரைச் சந்தித்த போது, அவரே சொல்வது போல் வயதும் அனுபவங்களும் அவரைப் பக்குவப்படுத்தியிருப்பதைக் காண முடிந்தது. அபூர்வமாக உணர்ச்சி வசப்படும் போது மட்டும்தான் எழுந்து நின்று பேசினார். மற்றபடி பேச்சில் அத்தனை நிதானம்! அவரது வழக்கமான அடுக்கு மொழிகள் கூட பேட்டியின் இறுதியில் மட்டும் தலைகாட்டினவே தவிர, இடையில் எங்குமே வராதது ஆச்சரியம்!



"முன்பு நீங்கள் தி.மு.கவிலிருந்து விலகி தனிக்கட்சி ஆரம்பித்ததற்கும் இப்போது மீண்டும் தி.மு.க.வில் சேர்ந்து அதன் கொள்கைபரப்புச் செயலாளராகப் பொறுப் பேற்றிருப்பதற்கும் என்ன காரணம்?"

"தகவல் தொடர்பு இடைவெளி (Communication gap) தான் நான் தி.மு.கவி லிருந்து விலகக் காரணமாயிருந்தது. அப்படி விலகிய பிறகும் கலைஞர் தான் எனது அரசியல் குரு-தலைவர் என்று நான் சொன்னேன். பிறகு ஓராண்டு காலம் அரசியலில் ஈடு படாமலும் இருந்தேன். அந்த நேரத்தில்தான் நான் காங்கிரஸில் சேரப் போகிறேன்; அ.தி.மு.க.வில் சேரப் போகிறேன் என்றெல்லாம் வதந்திகளைப் பரப்பினார்கள். இது போன்ற வதந்திகளுக்கு முடிவுகட்ட வேண்டுமானால் என்ன செய்வது என்று யோசித்தேன். அதன் விளை வாகத்தான் 'தாயக மறுமலர்ச் சிக் கழகம்' தொடங்கி எனக்கு நானே தாலி கட் டிக் கொண்டேன். அப் போதும் எனது தலைவர் கலைஞர் என்பதால் தான் என் கட்சியின் தலைவர் பொறுப்பைக் காலியாக விட்டு விட்டு, நான் பொதுச் செயலா ளர் பொறுப்பை ஏற்றுக்

கொண்டேன். இப்போது மீண்டும் தி.மு.க.வில் இணையும்படி கலைஞர் அழைப்பு விடுத்ததும் - ஒரு மாபெரும் இயக்கமான தி.மு.க. தனது பொதுக் குழுவிலேயே நான் இணைய வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றியதும் - எனக்குக் கொடுக்கப்பட்ட மிகப் பெரிய கௌரவம். அதனால்தான் தாயக மறுமலர்ச்சிக் கழகத்தைத் தி.மு.க.வுடன் இணைத்துக் கொண்டேன்."

**"தனிக்கட்சி நடத்திய அனுபவம் எப்படி?"**

"எனது இருபத்தைந்தாவது வயதில், எம்.ஜி.ஆர். செல்வாக்கோடு இருந்த சமயத்தில் நான் அவரை எதிர்த்துப் பேசியிருக்கிறேன். அப்போதெல்லாம் என் பேச்சில் ஓர் ஆவேசம் இருக்கும்; வேகம் இருக்கும். தனிக்கட்சி ஆரம்பித்து நடத்திய போதுதான், பொறுப்பிலிருக்கும் போது ஏற்படும் சிரமங்களையும் சங்கடங்களையும் நான் அனுபவபூர்வமாக உணர்ந்தேன். அரசியலில் வேகம் விவேகமல்ல என்பதையும் உணர்ந்து கொண்டேன். நிதானத்தைக் கடைப்பிடிக்கத் தொடங்கினேன். இதற்கு வயதும் ஒரு காரணம் என்றாலும் சொந்த அனுபவங்கள்தான் முக்கிய பாடம். இந்தப் பாடத்தைக் கற்றுக் கொள்வதற்கு நிறையச் செலவு செய்ய வேண்டியிருந்தது!" (சிரிக்கிறார்.)

**"இதுபோன்ற அநாவசியச் செலவுகளெல்லாம் எதற்கு என்று உங்கள் மனைவி உங்களிடம் கேட்டதில்லையா?"**

"இல்லை. பதினாறாண்டுகளுக்கு மேல் நான் சினிமாவில் இருந்தும் ஒரு சிறு கெட்ட பழக்கமும் என்னிடம் இல்லை. அப்படிப்பட்ட நான், பொது நலனுக்காகச் செலவு செய்வதில் என் மனைவிக்கும் சம்மதம்தான்."

**"சினிமா படத் தோல்விகள்தான் நீங்கள் தீவிரமாக அரசியலில் ஈடுபடக் காரணமா?"**

"நீங்கள் எதை வைத்துத் தோல்வி என்கிறீர்கள்? 'ஏ' சென்டரை வைத்தா? 'பி அண்ட் சி' சென்டர்களில் என் படங்கள் எப்போதுமே வெற்றிப் படங்கள்தான். நான் படம் எடுக்க ஆரம்பிப்பது தெரிந்தவுடனேயே தமிழகம் முழுவதிலுமுள்ள ஐயாயிரம் தியேட்டர்காரர்கள் அட்வான்ஸ் தரத் தயாராயிருக்கிறார்கள். நான் வெற்றிப் படங்களைத் தருவதுதானே இதற்குக் காரணம்!"

**"எத்தனையோ கட்சிகள் இருக்கும் போது,-உங்கள் அரசியல் களமாகத் தி.மு.க.வைத் தேர்ந்தெடுத்ததற்கு என்ன காரணம்?"**

"கடவுள் நம்பிக்கை உள்ளவர்களும் கம்யூனிஸ்ட் கட்சியில் இருக்கலாம் என்கிற நிலை இருந்திருந்தால் அல்லது நான் கடவுள் நம்பிக்கை இல்லாதவனாக இருந்திருந்தால் நான் கம்யூனிஸ்ட் கட்சியில்தான் சேர்ந்திருப்பேன். ஆனால், இந்த இரண்டுமே சாத்தியமில்லை! அதனால்தான் கலைஞரை என் தலைவராக ஏற்றுக் கொண்டு செயல்படுகிறேன்."

**"திடீரென்று இப்போது கலைஞர் உங்களுக்கு அழைப்பு விடுக்கக் காரணம் என்ன?"**

"நான் தி.மு.க. விலிருந்து விலகியிருந்தாலும் எனக்குக் கலைஞர் மீதிருந்த மதிப்போ அல்லது கலைஞருக்கு என்மீதிருந்த பாசமோ ஒரு போதும் குறைந்திருக்கவில்லையே! ஜெயலலிதாவை எதிர்த்து நான் பர்கூரில் போட்டியிட்ட போது, கடைசி நேரத்தில் எனக்காகத் தி.மு.க. தனது வேட்பாளரை வாபஸ் வாங்கிக் கொண்டது. தி.மு.க. அவ்வாறு செய்ததென்பது சரித்திரத்திலேயே அதுதான் முதல் முறை. ஆக, எனக்கும் கட்சிக்கும் எப்போதுமே ஒரு தொடர்பு இருந்து கொண்டேதான் இருந்தது என்பது புரியவில்லையா?"

**"தகவல் தொடர்பு இடைவெளி என்பது இனிமேல் ஏற்பட வாய்ப்பில்லையா?"**

"கலைஞரைச் சந்தித்துப் பேசிய போது எல்லா இடைவெளிகளும் காணாமல் போய் விட்டன. இனி வராது. காரணம், தி.மு.க. போன்ற மிகப் பெரிய ஜனநாயக அமைப்பு கொண்ட கட்சியின் பொறுப்பிலுள்ளவர்களுக்கு ஏற்படும் சங்கடங்கள், சிரமங்களெல்லாம் எப்படிப்பட்டதாக இருக்கும் என்பதை நான் தனிக்கட்சி நடத்திய காலத்தில் அனுபவ பூர்வமாக உணர்ந்தவனாயிற்றே!"

**"தி.மு.க.வின் வாரிசாக ஸ்டாலினை முன்னிறுத்துகிறார் கலைஞர் என்கிற குற்றச்சாட்டு இருக்கிற போது, உங்களுடைய வளர்ச்சி பாதிக்கப்படாதா? இது பற்றி நீங்கள் யோசிக்கவில்லையா?"**

"இந்தியாவிலுள்ள அரசியல் கட்சிகளுள் ஜனநாயக முறையைக் கடைப்பிடிக்கும் மிகச் சில கட்சிகளில் தி.மு.க.வும் ஒன்று. அங்கே யாரும் ஜனநாயக முறைப்படி தேர்ந்தெடுக்கப் பட்டுத்தான் பொறுப்புகளுக்கு வர முடியும். இந்த நிலையில் 'முன்னிறுத்தல்' என்கிற குற்றச் சாட்டே அபத்தமானது."

**"ஸ்டாலினுக்கும் உங்களுக்குமான உறவு எப்படி?"**

"நாங்கள் நல்ல நண்பர்கள். இன்று காலையில் நடந்த அண்ணா நினைவுநாள் ஊர்வலத்துக்குக் கூட நாங்கள் இருவரும் ஒரே காரில் தான் சென்றோம்!"

**"திருச்சியில் நடந்த தி.மு.க. மாநாட்டுக்குப் பிறகு, நிச்சயமாகத் தி.மு.க. ஆட்சிக்கு வந்துவிடும் என்று தொண்டர்கள் உற்சாகம் கொள்ள ஆரம்பித்து விட்டதாகத் தெரிகிறதே?"**

"தேர்தல் என்னும் தேர்வு. எழுதப் போகும் போது வரக்கூடாது சோர்வு. அந்த வகையில் தேர்வில் வெற்றி பெற வேண்டுமானால் நம்பிக்கை என்கிற பூஸ்டர் அவசியம்தானே!"

சந்திப்பு : **ப்ரியன்**

வண்ணப்படம் : **யோகா**



• பன்வாரி தேவி

**இரண்டு பேர் அந்தப் பெண்மணியைக் கற்பழித்தார்கள். வழக்குத் தொடுத்தார் அவர். மூன்று வருடங்கள் இழுத்தடித்து, அவரது குற்றச்சாட்டு செல்லாது என்று அதிர்ச்சித் தீர்ப்பு அளித்தது நீதிமன்றம்!**

**இந்தச் சம்பவம் நடந்தது ராஜஸ்தான் மாநிலத்தில். பாதிக்கப்பட்ட அந்தப் பெண்ணின் பெயர் பன்வாரி தேவி.**

# நியாயம் கேட்கும் புரட்சிப் பெண்!

ராஜஸ்தானில் இயங்கி வந்த 'அரசு பெண்கள் முன்னேற்றத் திட்டத்தின்'கீழ் 'சாதின்' ('நண்பர்கள்') என்ற அமைப்பில் சமூகசேவகியாக விளங்கியவர் பன்வாரி. 1992இல் குழந்தைத் திருமணத்திற்கெதிரான பிரசாரத்தை பலமாக முடுக்கிவிட்டனர் அரசு அதிகாரிகள் (ராஜஸ்தானில் இந்தக் கொடுமை இன்னமும் தொடருகிறது.)

பதேரி கிராமத்தைச் சேர்ந்த செல்வந்தர் ஒருவர் தம் ஒரு வயது மகளுக்குத் திருமணம் செய்ய இரண்டு வயது மாப்பிள்ளையை (குழந்தையை!) நிச்சயம் செய்திருந்தார்.

செய்தியை அறிந்தவுடன் பன்வாரி காவல் நிலையத்துக்குத் தகவல் தெரிவிக்க, மேற்கூறிய திருமணம் நின்றுபோனது.

தம் 'கௌரவத்தைச் சிதைத்த' பன்வாரியைப் பழிவாங்க முடிவெடுத்தார் செல்வந்தர். அவரது அடியாட்கள் ஐந்து பேர் பன்வாரியின் வீட்டிற்குள் புகுந்தனர். மூன்று பேர் பன்வாரியின் கணவன் மோகன்லாலைக் கட்டிப் போட்டு அடிக்க, இரண்டு பேர் பன்வாரியைக் கற்பழித்தனர்!

வெட்கத்தாலோ, பயத்தாலோ பன்வாரி முடங்கி விடுவார் என்று அவர்கள் நினைத்தது தவறானது. காவல் நிலையத்துக்கு மீண்டும் ஓடினார் பன்வாரி — இந்த முறை தமக்கு நியாயம் கேட்க. பெண்கள் இயக்கங்களும் கைகோத்துக் கொள்ள, குற்றவாளிகளின் மீது வழக்குத் தொடுத்தார். அந்தத் தீர்ப்புதான் இப்போது வெளியாகியுள்ளது.

"இப்படிப்பட்ட கொடூரமான கற்பழிப்பை இளைஞர்களால்தான் செய்ய முடியும்! ஆனால் நடுத்தர வயது தாண்டியவர்களைக் குற்றம் சாட்டுகிறார் பன்வாரி. ஆகவே இது செல்லாது!" என்று 'சரித்திரப் பிரசித்தி பெற்ற தீர்ப்பை' அளித்திருக்கிறது ஜெய்ப்பூர் நீதிமன்றம்.

நீதிமன்றத் தீர்ப்புக்குப் பிறகு மற்றொரு தாக்குதல் அவர்மீது நடந்திருக்கிறது. தம்மைக் கொல்ல நடந்த இந்த முயற்சி குறித்தும் காவல் நிலையத்தில் புகார் கொடுத்துள்ளார் பன்வாரி.

"அப்போது விவரம் புரியாமல் இருந்துவிட்டேன்!"

- மிகச் சிறு வயதிலேயே திருமணம் செய்து வைக்கப்பட்ட பன்வாரி, தம் பெண்களையும் சிறு வயதிலேயே மணமுடித்ததற்குக் கூறும் காரணம் இது.

வழக்குத் தொடுத்ததிலிருந்து அந்தக் குடும்பம் சந்தித்து வரும் சோதனைகள் கொஞ்சநஞ்சம் இல்லை. பன்வாரியின் கணவனை வீதியில் பார்த்தால் கூடப் பேசாமல் ஒதுங்கிவிடுகிறார்கள் கிராம மக்கள். அவர்களது மகனோ, "ஏன் பள்ளியில் யாருமே என்னுடன் நண்பர்களாக இருக்க மறுக்கிறார்கள்?" என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கிறான். இவ்வளவுக்கும் நடுவே காவல்துறை அதிகாரியாக அந்தப் பகுதிக்கு வந்திருக்கும் விஜய் குமார் யாதவ், "பன்வாரி தொடக்கத்திலிருந்தே பொய்களைக் கூறிவந்திருக்கிறார்" என்று ஒரு போடு போட்டிருக்கிறார்!

இன்னமும் கூட சமூக சேவகியாகத்தான் பணி புரிகிறார் பன்வாரி. பயப்படாமல் துணிவுடன் இருந்தாலும் அவரது கலகலப்பும் நம்பிக்கையும் குறைந்துவிட்டன.

"எனக்கே நீதி கிடைக்காதபோது, நான் எப்படி மற்றவர்களுக்கு நீதி கிடைக்க உதவுவேன் என்று தெரியவில்லை..." என்கிறார் ஏக்கத்துடன். ஜெய்ப்பூர் நீதிமன்றத் தீர்ப்பை எதிர்த்து அப்பீல் செய்ய இருக்கிறாராம்.

— அருண் சரண்யா

# என் கடவுளுக்கு நைவேத்தியம் காட்டி சாப்பிட வேண்டும்?



- ஒவ்வொரு பதார்த்தத்திலும் ஜீவனுண்டு. அதையறுத்து சமைப்பதனால் தோஷம் உண்டாகின்றது. அவைகளை கடவுளுக்கு ஆராதனைசெய்து சாப்பிட்டால் அந்த தோஷம் நிவாரணையாகும்.
- யஞ்ஞத்தினால் ஆராதிக்கப்பட்ட தேவதைகள், சந்தோஷ மடைந்து இஷ்டமான போகங்களைக் கொடுப்பார்கள். ஆதலால் நீங்கள் சாப்பிடுவதற்குமுன் அன்னமும் பதார்த்தங்களும் கடவுளுக்கு காட்டி ஆராதனை செய்து அந்த சேஷத்தைச் சாப்பிடவேண்டும்.
- இந்திராதி தேவதைகளும் ஜனங்களுக்கு ஜீவனார்த்தமாகிய பதார்த்தங்களைக் கொடுப்பதற்கு மழையைப் பெய்விக்கப் பகவானால் நியகிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் அவர்களால் விளைவித்துக் கொடுக்கப்பட்ட பதார்த்தங்களை மறுபடியும் அவர்களுக்கு அர்ப்பணம் செய்வதனால் அவர்களை சந்தோஷித்து மறுபடியும் பிரதி வருஷங்களிலும் மழையை விருத்து செய்து கொண்டே வருவார்கள். அதனால் ஜனங்கள் க்ஷேமமாய் விருத்தியடைவார்கள்.

*ஆதாரம்: ஜீவப்ரஹ்மைத்ய வேதாந்த ரஹஸ்யம்*

ஆகையால் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோருக்கு விநியோகம் செய்யவும்.

**திருமண வைபவங்களுக்கு** சீர் முறுக்கு, சீர் அதிரசம், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய் வகைகள், திரட்டுப்பால் அப்பம் முதலியவை வழங்கப்படும்.

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு,
சென்னை - 20. போன்: 4915662, 4914213

Ad-Ventures

# லவ் பேர்ட்ஸ்

இளமைத் துடிப்புள்ள காதல் கதைக்கு ஏற்ற பலமான அஸ்திவாரம்தான். கல்லூரிக் களத்தில் கலக்கலான ஆரம்பம். கொஞ்சம் மேஜிக், நிறைய டான்ஸ், சுமாராக சண்டை, சிரமப்பட்டு நடிப்பு என்று பிரபு தேவா திரையை நிறைத்து, ஓரத்தில் கொஞ்சம் நக்மாவுக்கு இடம்கொடுக்கிறார்.

வழக்கமான பணக்கார ஹீரோயின், ஏழை ஹீரோ. ஆகவே முதலில் மோதல். பின் காதல். தயாரிப்பாளரிடம் நிறைய பைசா இருந்திருப்பதால், மெட்ராஸ் காதல் சீப்பாக இருக்குமே என்று நினைத்து, கதையை பிளேனில் ஏற்றி லண்டனுக்கு அனுப்புகிறார்.

சொதப்பல் தொடங்குவது இங்கேதான்.

இன்டர்வலில் பிரமாத சஸ்பென்ஸாக பிரபுதேவா இறந்து விடுவதாகச் சொல்லி விட்டு, லண்டனில் இன்னொரு பிரபுதேவாவைக் காட்டி, இவர் வேறு; ஒரே தாயின் இரு பிள்ளைகள், பாதிரியார் வளர்த்தது என்று ஏகமாக வழிந்து மீண்டும், 'ஸாரி, நானேதான் அவன்' என்று காதல் தியாகக் கதையெல்லாம் சொல்வதைக் கேட்க தியேட்டரில் ஆளில்லை. அநியாய இழுப்பு.

முதல் முறையாகக் குடும்ப சென்டிமென்ட்டை விடுத்து, காதல் சென்டிமென்ட்டுக்கு வந்திருக்கிறார் வாசு. காட்சி அமைப்புகளில் நாடகத்தனம் குறைந்து, கொஞ்சம் அழகு தெரிகிறது.

கதையாகப்பட்ட ஒரு முக்கிய சமாசாரத்தில் போதிய அக்கறை இன்மையால் எல்லாம் கட்-அவுட்டுக்குப் போட்ட மாலையாகக் காய்ந்து, கருகுகிறது.

லண்டனைச் சுற்றிக் காட்டும் எம்.சி. சேகரின் கேமரா, பெரும்பாலும் ஹெலிகாப்டரை விட்டு இறங்க மறுக்கிறது. அழகுதானென்றாலும், முழுப் படத்தையும் டாப்-ஆங்கிளிலிருந்து பார்த்தால் கழுத்து கழண்டு விடும்.

வழக்கத்துக்கு விரோதமாக இசைக்கு பதில் இரைச்சல் தந்திருக்கிறார் ரகுமான். 'மலர்களே' பாட்டைத் தவிர, மற்றதெல்லாம் ஜிகினாக் குப்பை. அநாவசியத்துக்கு ஒரு அப்பாச்சி இந்தியன்.

சம்பவங்களின் அநம்பகத்தன்மை, வசனங்களின் அலுப்பூட்டும் நீளம், எடிட்டர் ஆயுதத்தின் சாணை பிடிக்காமையால் விளைந்த நேர்த்தியின்மை, கொட்டாவி தரும் கிளைமாக்ஸ் எனப் பல ஓட்டைகள் படத்தில்.

பிரம்மாண்டமாக என்னவோ பண்ண நினைத்து, பிள்ளையார் சுழியோடு திருப்தி அடைந்து விட்டிருக்கிறார்கள்.

பிரபுதேவாவுக்கு மற்றொரு அடி.



# அமலாக்கப்படும் அதிர்ஷ்டம்

“பெரிய 'ஹமாம்' ஆபீஸர்னு சொல்லுவியே, அவருடைய விவகாரம் அமலாக்கம் வரைக்கும் போயிடுச்சி பார்த்தியா?” என்று வரதராஜன்தான் நியூஸ் பேப்பரில் அதைக் காட்டினார்.

'திருவாணைக்காவலில் அரசு அதிகாரி பாலகிருஷ்ணன் வீட்டில் அமலாக்கப் பிரிவினர் சோதனையிட்டனர். விசாரணையின் போது ஹார்ட் அட்டாக் ஏற்பட்டு, தொடர முடியாமல் போனது!'

என்று நாலே வரிகளில் ஒரு குட்டிச் செய்தி இருந்தது. அப்பொழுதும் என்னால் நம்பவே முடியவில்லை. என் மதிப்பிற்குரிய ஆபீஸர் பாலகிருஷ்ணன் மீது இப்படி ஒரு தகவலா என்று மனம் அடித்துக் கொண்டது.

“அப்பவே திருச்சி டிவிஷன் ரங்கநாதன் சொன்னான்னு நான் சொல்லலே... இங்கேயிருந்து டிரான்ஸ்பர் ஆனதும் ஆள் சுத்தமா மாறியாச்சாம்! திருவாணைக்காவல்லே ஒரு பெரிய பங்களாவாம், ரெண்டு மாருதி காராம், கலர் டீ.வி., ஃப்ரிட்ஜ்னு வாங்கி தள்ளிட்டே இருந்தாராம். வீட்டு வேலைக்காரி கூட, பட்டுப் புடைவை கட்டிட்டுதான் வேலை செய்வாளாம். நீதான் பழைய பாலகிருஷ்ணன்னு நினைச்சிட்டு நம்பமாட்டேன்னு அடம் பிடிச்சே... இப்ப பாரு! அமலாக்கம், ஹார்ட் அட்டாக்குன்னு போயிடுச்சு!” வரதராஜன் கொட்டித் தீர்த்தார்.

எனக்கென்னவோ அந்த அதிகாரியின் அமுல் பேபி முகம்தான் நினைவிற்கு வந்தது. அச்சமின்றி அணுகிப் பேசலாம். பந்தா இல்லாத ஆசாமி. வரதராஜன் போல், அவருடைய நேர்மையால் வரும்படி பாதிக்கப்பட்ட ஓரிருவரைத் தவிர அவரை யாருமே அப்பழுக்காய்ப் பேசியதில்லை.

திருச்சி டிவிஷன் ஒரு 'வரும்படி' பொக்கிஷம்தான். அதை ஒரு ஒழுங்கிற்குக் கொண்டுவரத்தான் இவரை அங்கு மாற்றினார்கள். அப்படியிருக்க இவரே மாறிவிட்டாரா.. பேப்பர்காரன் பொய் சொல்கிறானா?

மிகவும் வேதனையாகப் போய்விட்டது. உடனே போய்ப் பார்த்துவிட்டு வர வேண்டுமென்று தோன்றவே, ஆபீஸுக்கு லீவ் போட்டுவிட்டு திருச்சி கிளம்பினேன்.

திருச்சிக்குப் போய் இறங்கிய போது

**அகிலா கார்த்திகேயன்**

இரவு ஏழாகியிருந்தது. லாட்ஜில் ரூம் போட்டு விட்டு திருவானைக்காவலுக்கு பஸ்ஸைப் பிடித்தேன். அவர் வீட்டிற்குப் போய் விசாரித்துதான் எந்த ஆஸ்பத்திரி என்பதை அறிய வேண்டும். திருவானைக்காவலில் விலாசம் கேட்டதும் ஆளாளுக்கு "ரெய்டு நடந்துச்சே, அந்த வீடுதானே!" என்று நமுட்டு சிரிப்போடு வீட்டிற்கு வழிகாட்டிய போது பாலகிருஷ்ணன் ஸாரை நினைக்க எனக்குப் பரிதாபமாக இருந்தது.

ஆனால் அந்தப் பரிதாபம் அசத்தலான அவருடைய பங்களாவைப் பார்த்ததும் மாறி விட்டது. மாமரம், தென்னை மரம் என்று புடைசூழ ஒரு பண்ணையார் வீடு கெட்டது. ஒன்றுக்கு இரண்டாக மாருதி கார்கள். இன்னும் உள்ளே என்னென்னவோ... பாலகிருஷ்ணன் மேல் எனக்கிருந்த மதிப்பில் பாதிப்பு ஏற்பட்டு விட்டது.

கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தவனை பாலகிருஷ்ணன் ஸாரின் மனைவிதான் வரவேற்றார்.

"வாங்க... வாங்க... பேப்பர்லே, நியூஸ் பார்த்துட்டு நீங்களெல்லாம் வருவீங்கன்னு எனக்குத் தெரியும்!"

"ஸாரை எங்கே போய்ப் பார்க்கறது?" தயங்கியபடி கேட்டேன்.

"எல்லாம் என் தலை எழுத்து... உள்ளே பெட்ருமுக்குப் போய்ப் பாருங்க!"

அறைக்குள் எட்டிப் பார்த்தேன். தூக்கி வாரிப் போட்டது. பாலகிருஷ்ணன் ஸார் வேட்டியும் பனியனுமாக கீழே உட்கார்ந்தபடி கார்டுகளில் எதையோ எழுதி எழுதி வீசிக் கொண்டிருந்தார். அவரைச் சுற்றி கார்டுகள் காடாய் குவிந்திருக்க, நான் வந்து நிற்பதை அவர் கவனிக்கவில்லை. அவர் கிறுக்கி எறிந்ததில் ஒரு கார்டு என் அருகில் விழ, அதில் 'அமலா' என்றிருந்தது. மெதுவாக உள்ளே நுழைந்து பார்த்தபோது பகீர் என்றது. அத்தனை கார்டிலும் 'அமலா', 'அமலா', 'அமலா' தான்!

ஐயோ பாவம்! அமலாக்கப் பிரிவு இப்படி ஒரு பாதிப்பை ஏற்படுத்திவிட்டதே என்று எனக்குத் திரும்பவும் இவர்மேல் பச்சாதாபம் பிறந்தது. ஒரு நல்ல திறமையான அதிகாரிக்கு பணத்தாசையால் இப்படி மனநிலை பாதிப்பு ஏற்பட்டு விட்டதே என்றிருந்தது.

"மூர்த்தி வந்திருக்கார் பாருங்கோ... என்னமோ ஏதோன்னு அவா அவா பயந்துண்டு





''உங்க பையன் வருகாலத்துல பெரிய ஆளா வருவான் பாருங்க!''

''எப்படி சொல்றீங்க?''

''ஐயா எனக்கு 'நெஞ்சுவலி' என்பதால் பள்ளிக்கு வர இயலவில்லைன்னு லீவ் லெட்டர் எழுதறானுங்க!''

— க. கிருஷ்ணமூர்த்தி

---

உங்களைப் பார்க்க வர்றா! நீங்க என்னடான்னா பைத்தியமாட்டம் டி.வி., பத்திரிகை, போஸ்ட் கார்டுன்னு உட்கார்ந்துட்டிருக்கீங்க. மானம் போறது!'' பாலகிருஷ்ணனின் மனைவி ஒரு அதட்டல் போட்டதும் அவர் நிமிர்ந்து நான் வந்திருப்பதை உணர்ந்தார்.

''அடடா, மூர்த்தியா? வாப்பா... மெட்ராஸ்லேர்ந்து அலறி அடிச்சிட்டு வந்திராக்கும்.... ஹக்.... ஹக்.... ஹக்....'' என்று சிரிக்க ஆரம்பிக்கவே, எனக்குக் கொஞ்சம் கோபம் கூட வந்தது!

''இவ நடந்ததையெல்லாம் சொல்லியிருப்பாளே... உனக்கு முன்னாலேயே என்னை பைத்தியம்கறா பாரு... இந்த பைத்தியத்தாலேதான் இத்தனை பெரிய பங்களா, கார், கலர் டி.வின்னு அனுபவிக்க முடியுது... 'அவனவன் அரசாங்க உத்யோகத்தை வைச்சி எப்படியெல்லாம் சம்பாதிக்கறான். நீங்க பிழைக்கத் தெரியாத பைத்தியமாட்டம் இருக்கீங்களே'ன்னு இவளே தான் என்னை அடிக்கடி குத்திக் காட்டுவா... இப்போ சம்பாதிக்கும் போதும் பைத்தியம்னு சொல்றா...''

நான் நெளிந்தேன்.

''மூர்த்தி ரொம்ப பயந்துட்டயா? பாவம். உன்னை மாதிரிதான் எல்லாரும் என்னை தப்பாவே புரிஞ்சிட்டு திரிஞ்சானுங்க. பங்களா, பினாட், ஃபிரிட்ஜ்னு சொந்தமாக்கிக்க இப்பெல்லாம் 'அவுட் ஆஃப் வே'யிலே போய் சம்பாதிக்கணும்னு அவசியமேயில்லே... 'பன்றி மார்க் சீயக்காய் தூளே சிறந்தது. ஏனென்றால்...' ஒரு பத்து வார்த்தைக்குள்ளே இதை பூர்த்தி செஞ்சி கூப்பனை அனுப்பணும்னு 'மலர் மொட்டு' பத்திரிகையிலே போட்டி வந்திருந்தது. அனுப்பினேன். பங்களா முதல் பரிசா கிடைச்சது! டி.வி. யிலே ஸ்ரீதேவியோட பழைய மூக்கை மட்டும் காட்டி யார்னு கண்டுபிடிக்கச் சொன்னாங்க. பம்பர் பரிசா ஒரு மாருதி அடிச்சிது.... அப்புறம் 'தரித்திர லட்சுமி ஃபைனான்ஸ்'லே நூறு ரூபாய் 'டெபாசிட்' பண்ணினேன். குலுக்கல் முறையிலே இன்னொரு கார் விழுந்தது... போன மாசம் 'பந்த்' நடந்தன்னிக்கு 'பா.பா' டி.வி.காங்க சிறப்பு நிகழ்ச்சி நடத்தினாங்க. 'பந்துவராளிலே அமைஞ்ச சினிமா பாட்டு எது'ன்னு போன்லே சொல்லச் சொன்னாங்க. உடனே டயல் பண்ணி சொன்னேன்... ஒரேடியா ஐம்பது பட்டுப் பொடவையைக் கொடுத்துட்டுப் போயிட்டான்! இவளே மனசு வந்து வேலைக்காரிக்குப் பத்து புடைவை கொடுத்தான்னா பாரேன்... அப்புறம் 'காஷ்மீர் கி கலி' இந்தி படத்தோட இசையமைப்பாளர் ஓ.பி. நய்யார்னு எழுதிப் போட்டு வடக்கத்தி டி.வி. காரங்ககிட்டேர்ந்து கலர் டி.வி. அடிச்சேன்.''

எனக்கு தலையை சுற்றிக் கொண்டு வந்தது!

''என்ன மூர்த்தி, மயக்கம் வருதா... சொல்றதைக் கேளு.... இப்படித்தான் எவனோ மொட்டை பெட்டிஷன் போட, அதை தூக்கிண்டு இன்வெஸ்டிகேட் பண்ணணும்னு 'என்ஃபோர்ஸ்மெண்ட்'காரன் வந்தான். எவிடென்ஸோட நான் சம்பாதிச்ச பொருளுக்கெல்லாம் எப்படின்னு விளக்கம் சொன்னேன். பாவம் அந்த ஆபீஸர் - எதை எதையோ எக்ஸ்பெக்ட் பண்ணிட்டு வந்தவருக்கு ஒரே ஷாக்... ஹார்ட் அட்டாக் வந்து விழுந்துட்டாரு... அவரோட வந்தவங்க தூக்கிட்டு ஆஸ்பத்திரிக்குப் போனாங்க... பேப்பர்காரன் இதைத்தான் மொட்டையா குட்டிச் செய்தின்னு போட்டுட்டான்... இப்ப பாரு, நீயே மெட்ராஸ்லேர்ந்து அலறி அடிச்சிட்டு வந்திருக்கயே...''

நான் பேந்தப் பேந்த முழித்தேன். அவர் தொடர்ந்தார்.

''பயப்படாதே! நான் இன்னும் நேர்மையான அதிகாரிதான்... இந்த மட்டும் என்ன ஏதுன்னு விசாரிக்க வந்தியே, ரொம்ப தாங்க்ஸ்... ஊருக்கு இன்னிக்கே திரும்பறதுன்னா எனக்கொரு ஹெல்ப் பண்ணு.... 'வீட்டைத் தாண்டிய விசாலி' சீரியல்லே, வேதம் புதிது படத்தோட மூன்றெழுத்து கதாநாயகி யார்னு கேட்டிருந்தாங்க... நாளைக்குள்ளே போய்ச் சேரணும்... அதைத்தான் அமலா அமலான்னு போஸ்ட்கார்டிலே எழுதிட்டு இருந்தேன். எப்படி அனுப்பறதுன்னு புரியாம இருந்தது. நல்ல வேளை, நீ வந்தே. ஐநூறு கார்டு இருக்கு. தி.நகர் போஸ்ட் ஆபீஸிலே கொண்டு போய் நாளைக்கே போட்டுடு... 'வாஷிங்மிஷின் விழுந்தா நீயே எடுத்துக்கோ. எங்கிட்டே ஏற்கெனவே பரிசா விழுந்தது இருக்கு!''

**பை**த்தியமா... சூழ்நிலைகளால் பைத்திய மாக்கப்பட்டிருக்கிறாரா.... குழப்பத்துடன் அவர் கொடுத்த கார்டு கத்தைகளை வாங்கிக் கொண்டாலும், சென்னை வந்து இறங்கியதும் தி.நகர் போஸ்ட் ஆபீஸ் போவது தான் என் முதல் காரியமாக இருந்தது. வாஷிங் மிஷின் விழுந்தால் வேண்டாமென்று சொல்ல எனக்கென்ன பைத்தியமா!

# தனபிரியா

வழங்கும்

## சேமிப்பு திட்டங்கள்

◆ தனயோக ஃபிக்செட் டெபாசிட் திட்டம் ◆

டெபாசிட்களுக்கு 1 கிராம் தங்க காசு வழங்கப்படும்

### க்யூமுலேடிவ் டெபாசிட்

| வருடம் | டெபாசிட் தொகை | முதிர்வு தொகை | வருடாந்திர வட்டி | ஊக்கத் தொகை |
|---|---|---|---|---|
| 12 மாதங்கள் | 10,000 | 13,000 | 30.00% | 2% |
| 26 மாதங்கள் | 10,000 | 16,000 | 27.69% | 2% |
| 36 மாதங்கள் | 15,000 | 30,000 | 33.33% | 3% |

### ஃபிக்செட் டெபாசிட்

| வருடம் | வட்டி | குறைந்தபட்ச டெபாசிட் தொகை | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| 12 மாதங்கள் | 25% | ரூ. 5,000/- | 5% |

### பென்ஷனர் மற்றும் முதியோர்

| வருடம் | வட்டி | குறைந்தபட்ச டெபாசிட் தொகை | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| 12 மாதங்கள் | 30% | ரூ. 5,000/- | 2% |

### தனபிரியா பாண்ட்

குறைந்தபட்ச முதலீடு ரூ. 25,000/- இரு மடங்காகிறது. 36 மாதங்களில் ரூ. 50,000/-
ஊக்கப் பரிசு : 5 கிராம் தங்க காசு

### தனயோக பாண்ட்

குறைந்தபட்ச முதலீடு ரூ. 50,000/- மும் மடங்காகிறது. 57 மாதங்களில் ரூ.1,50,000/-
ஊக்கப் பரிசு : 10 கிராம் தங்க காசு

### திருமகள் திருமண திட்டம் ரிக்கரிங் டெபாசிட் திட்டம்

ரூ.1000 x 25 மாதங்கள் அல்லது
ரூ. 500 x 25 மாதங்கள்

26ம் மாத துவக்கத்தில் ரூ. 50,000/- அல்லது ரூ. 25,000/- பெற்று 27ம் மாதம் முதல் மாதம் ரூ.1000/- அல்லது ரூ.500/- வீதம் 25 மாதத்திற்கு எந்தவிதமான வட்டி இல்லாமல் திரும்ப செலுத்தலாம் அல்லது ரூ. 25,000/-ஐ மறுமுதலீடு 10 வருட காலத்திற்கு செய்து ரூ.2,32,835 பெறுங்கள்

### ஓய்வுதாரர் நலத் திட்டம்

| | |
|---|---|
| குறைந்தபட்ச முதலீடு<br>காலம்<br>வட்டி<br>விகிதம் | ரூ. 1 லட்சம் அல்லது அதற்கு மேல் 6 வருடங்கள் அல்லது அதற்கு மேல் 26 சதவிகிதம் வருடத்திற்கு மற்றும் 1800 சதுர அடியில் வீட்டு மனை திருமுல்லை வாயில் நகரில் இலவசமாக பத்திர பதிவு செய்து வழங்கப்படும் அல்லது ரூ. 15,000/- ரொக்கம் |




வட்டி தொகைக்கு முன் கூட்டின காசோலைகள் பின் தேதியிட்டு வழங்கப்படும்

● ஞாயிற்றுக் கிழமையும் அலுவலகம் இயங்கும் ●


**தனபிரியா இன்வெஸ்ட்மெண்ட்ஸ் (இந்தியா) லிமிடெட்**

*காம்தார் பில்டிங் (2வது மாடி) 143/3. பிராட்வே, சென்னை - 600 108 போன் : 565668*

**கார்பரேட் அலுவலகம் :** எண்.34 துரைசாமி சாலை, தி. நகர், சென்னை -17. போன் : 8281116.


"விரைந்து சேருங்கள் மகிழ்ச்சியாக வாழுங்கள்"

• அதிவேகமாகப் பிரிக்கிறது

# ஒரு மணி நேரத்தில் 40,000 கடிதங்கள்!

எட்டாயிரம் சதுர அடிப் பரப்பை அடைத்துக் கொண்டிருக்கும் ஒரு தானியங்கி இயந்திரத்தை இந்தியத் தபால்துறை சென்னையில் நிறுவியிருக்கிறது. பெல்ஜியம் நாட்டு இறக்குமதி, விலை சுமார் பத்து கோடி ரூபாய். இதை வைப்பதற்கேற்ற ஒரு கட்டடம், கருவிக்கான கஸ்டம்ஸ் வரி இதெல்லாம் மேலும் ஒரு பத்து கோடி ரூபாயைச் சாப்பிட்டு விட்டது. அவ்வளவே!

மீனம்பாக்கத்தில், இருபது கோடி செலவு செய்து நிறுவப்பட்டிருக்கும் இந்தக் கருவி செய்யும் வேலைதான் என்ன?

தபால்களைப் பிரித்துப் போடும். சும்மா இல்லை. ஒரு மணி நேரத்தில் நாற்பதாயிரம் கடிதங்களை முகவரிக்கு ஏற்ப பிரித்துப் போடும்.

எப்படி ஒரு கருவியால் கடிதத்தின் மேலுள்ள முகவரியைப் படித்துச் செயல்பட முடியும்? தெரிந்து கொள்ளப் போன போது..

முதல் பகுதியில் சென்னையின் வெவ்வேறு தபால் பெட்டிகளிலிருந்து சேகரிக்கப்பட்ட ''ஃபர்ஸ்ட் க்ளாஸ் மெயில்''கள் (அதாவது கார்டு, இன்லண்ட் கவர், அதிக எடையற்ற தபால் உறைகள் ஆகியவை) வந்து சேருகின்றன. அவற்றில், கருவிக்கு ஏற்ற மாதிரியானவற்றைப் பிரித்து உள்ளே அனுப்புகிறார்கள் சில ஊழியர்கள்.

எந்த மாதிரி கடிதங்களைக் கருவி ஏற்கும்?

- அஞ்சலட்டை, புதிய இன்லண்ட் கடிதம் (பழையதில் ஒட்டப்படாத இரு பக்கங்கள் இருப்பதால் ஏற்காது), அஞ்சல் துறை வெளியிடும் தபால் உறை.
- தனியார் வெளியிடும் உறை என்றால் 9 லிருந்து 16 செ.மீ., நீளமும் 140லிருந்து 255 மி.மீ. அகலமும் இருக்கலாம். (வழக்கமாகக் கடைகளில் விற்கப்படும் இரண்டு வித வெளிர் பழுப்பு உறைகள் இந்தப் பிரிவுகளில் அடங்கி விடுகின்றன).
- பின்கோடு எழுத விடப்பட்டிருக்கும் கட்டங்களுக்குக் கீழே வேறு எதுவும் எழுதப்படாமல் இருக்கும் கடிதங்கள்.
- எல்லா மடிப்புக்களும் சரியாக ஒட்டப்பட்ட உறைகள்.
- உறைக்குள் தாளைத் தவிர எந்த உறுதியான பொருளும் இருக்கக் கூடாது.
- அதே போல் உறையை ஸ்டேப்ளர் பின்னால் இணைத்திருக்கக் கூடாது.



இப்படித் தேர்வு செய்யப்பட்ட கடிதங்கள் ''அட்வான்ஸ்ட் காம்ப்பாக்ட் ஸ்யூட்'' என்ற பகுதியைச் சென்றடைகின்றன. இதில் பத்து ஊழியர்கள் (Bar Coders என்கிறார்கள்) அடுத்தடுத்து அமர்ந்திருக்கிறார்கள். அவர்களுக்கு எதிரே உள்ள கன்வேயர் பெல்ட்டில் மேற்கண்ட கடிதங்கள் ஒவ்வொன்றாக வந்து சேருகின்றன. குறிப்பிட்ட இடத்தில் கடிதம் தானாக நிற்க, முகவரியின் 'பின்கோடை' கம்ப்யூட்டரில் தட்டுகிறார் ஊழியர். அது சங்கேத வரிகளாக (Bar Code) அந்தக் கடிதத்தின் முகவரிப் பகுதியில் பின்கோடு பகுதிக்குக் கீழ், சிவப்பு வண்ணத்தில் பதிக்கப்படுகிறது. இந்த bar code என்பது இயந்திரம் படிக்கவல்ல சங்கேத மொழி.

அடுத்து, அதிவிரைவு கடிதம் பிரிக்கும் பகுதிக்கு இவை செல்கின்றன. 'பார் கோடு' செய்யப்பட்ட கடிதங்கள் அசுர வேகத்தில் இங்கு இயந்திரத்தால் பிரிக்கப்பட்டு 200 வெவ்வேறு புறாக்கூண்டுகளுக்கு (பல்வேறு தபால் நிலையங்களுக்கானவை) தானியங்கி முறையில் அனுப்பப்படுகின்றன. ஒவ்வொரு புறாக்கூண்டில் சேரும் கடிதங்களையும் 'பண்டிலா'க்கி (இதைச் செய்வதும் கருவியின் மற்றொரு பாகம்தான்) அந்தந்த இடத்துக்கு

• பார்கோடுகள்....





லான பிரம்மானந்தத்திடம் இந்தக் கருவிக்கான அவசியம் என்ன என்று கேட்டோம்.

காலை வேளைகளில் தபால் நிலையங்களில் நிலவும் டென்ஷனை இது பெரிதும் குறைக்கும்; கடிதம் கிடைக்கத் தாமதமானால் மிகவும் கோபப்படும் நகர மக்களை இது சமாதானப்படுத்தும் என்றார்.

மற்றொரு காரணத்தையும் குறிப்பிட்டார் பி.டி.எஸ்.குமார். இவர் தானியங்கித் தபால் துறை மையத்தின் இயக்குனர்.

"தனியார் துறை நிறுவனங்களின் குரியர் சர்வீஸ்களால் இன்னும் சில ஆண்டுகளில் தபால் துறையே நொடித்துப் போக வாய்ப்பு உண்டு. அவற்றிற்கு ஈடுகொடுக்க இதுபோன்ற தொழில்நுட்ப முன்னேற்றங்களைப் பயன்படுத்திக் கொள்வது வெகு அவசியம்."



அனுப்புகிறார்கள்.

கருவியைப் பயன்படுத்துவதில் ஆதாயம் என்ன? கைகளால் பிரிக்கும் போது 'மகாராஷ்டிரம்' என்ற புறாக்கூண்டில் வந்து சேரும் தபால்களை, பம்பாயிலுள்ள 'ஸார்டிங்' அலுவலகத்துக்கு அனுப்ப, அவர்கள் மகாராஷ்டிரத்தின் பல்வேறு பகுதிகளுக்கேற்பப் பிரித்து, வெவ்வேறு தபால் நிலையங்களுக்கு அனுப்புவார்கள்.

இந்தக் கருவியைப் பயன்படுத்தும் போது, கடிதங்களை ஸார்டிங் அலுவலகத்துக்கு அனுப்பாமல் நேரடியாகவே தபால் நிலையங்களுக்கு அனுப்ப முடிகிறது. இதனால் நேரம் மிச்சம்.

"பம்பாயில் சில வருடங்களுக்கு முன் இக்கருவி அறிமுகமாகி விட்டது. அடுத்த பெருமை சென்னைக்குத்தான் கிடைத்திருக்கிறது" என்ற போஸ்ட்மாஸ்டர் ஜெனரல்

இயந்திரங்கள் நிறுவியதற்குச் சென்னையில் யூனியன் எதிர்ப்பு தெரிவிக்கவில்லை. காரணம் டெல்லியில் ஏற்கெனவே இது தொடர்பான ஒப்பந்தம் கையெழுத்தாகி விட்டதாம்!

தானியங்கி கருவி இயங்கும் மையத்தில் பணிபுரியும் சில ஊழியர்களின் கருத்துக்களைக் கேட்டோம்.

"இரண்டு ஊதிய உயர்வுகள், ஏ.சி. சூழல், மணிக்கு 2000 கடிதங்களுக்கு மேல் Code செய்தால் அதற்குப் படி ஆகியவற்றில் மயங்கி வந்து விட்டோம். ஆனால் ஒவ்வொரு மணி நேரமும் எங்கள் வேலையின் அளவு (ஒவ்வொரு ஊழியரும் மணிக்கு எவ்வளவு கடிதங்களை Code செய்கிறார் என்ற புள்ளி விவரம்) மைய கம்ப்யூட்டரில் பதிவாவது சங்கடமாக இருக்கிறது. பணத்துக்காக அடிப்படை சுதந்தரத்தை இழந்து விட்டோமோ என்று கொஞ்சம் உறுத்தல். நீண்ட நேரம் வேலை செய்வதால் கண் எரிச்சல். மற்றபடி அமைதியான, அருமையான சூழ்நிலை தான்" என்றனர்.

- ஜி.எஸ்.எஸ்.

## 7. சூரிய காங்கேயன்...?

மேன்மாடத்தில் உலவிக் கொண்டிருந்த கிருஷ்ணமல்லர், ஏதோ சிக்கலான புதிருக்கு விடைகாண முயன்று கொண்டிருந்ததாகத் தெரிந்தது. முப்புரிநூல் குறுக்கே ஓடிய அவரது திறந்த மார்பு - அகன்று செப்புத் தகட்டால் அடித்தது போலிருந்தது. யானையின் துதிக்கையைப் போல் பக்கங்களில் தொங்கிய கரங்கள் ஒன்றுடன் ஒன்று இணைந்தும், பிரிந்தும், அவ்வப்பொழுது உயர்ந்து முரட்டுக் குழல்களைக் கோதி விட்டுக் கொண்டுமிருந்தன. அவர் எதிரிலிருந்த இருக்கைகளில் அமர்ந்திருந்த ஆதித்யனோ யுவானோ, சற்றுத் தள்ளி அமர்ந்திருந்த இளவரசியோ அவர் சிந்தனையைக் கலைக்கத் துணிவின்றி சம்பாஷணையை அவரே துவக்கக் காத்திருந்தனர்.

உலவுவதைச் சற்று நிறுத்திய கிருஷ்ணமல்லரின் யானை விழிகள் யுவானின் மீது பதிந்தன. அடுத்து ஒலித்த அவரது சொற்களும் சிந்தனையில் தோய்ந்தே ஒலித்தன. "யுவான், உன் தந்தை தமிழகத்திற்கு வந்தது சிற்பக்கலை பயில்வதற்குத்தான். வந்த ஒரு ஆண்டுக் காலத்திற்குள் அதைப் பயிலவும் செய்தார். பதிலாக மாறன் அமுதனாரின் உத்தரவுப்படி பாண்டியருக்குப் போர்ப் பொறிகளை அமைக்கவும், அவற்றைப் போர்களில் பயன்படுத்தவும் பயிற்றுவித்தார். போசளரின் கவனம் திரும்பவும் அதுவே காரணமாயிற்று.

யுவானின் குரல் குறுக்கே புகுந்தது. "அப்படியானால் அவருக்குத் தகுந்த பாதுகாப்பு ஏன் அளிக்கப்படவில்லை?"

"தவறு யுவான். யாங்சின்னைக் காற்றுக் கூட எளிதில் நெருங்க இயலாதபடி பாதுகாத்துத்தான் வைத்திருந்தோம். ஆனால் சேரருடனான போரில் போசளர் தலையீடு பெரிதும் இருந்ததை மன்னரும் இளையபாண்டியரும் உணர்ந்தபின்புதான் போசளரை அடியோடு ஒடுக்கவும், தமிழகத்தை விட்டு அவர்களை வெளியேற்றவும் மன்னர் தீர்மானித்தார்."

கிருஷ்ணமல்லரின் சொற்களை மீண்டும் யுவானின் குரல் இடைமறித்தது. "அதற்கும் என் தந்தைக்கும் என்ன



# இந்திர தனுசு

# விஷ்வக்சேனன்

தொடர்பு?"

கிருஷ்ணமல்லர் சற்று நிதானித்தார். அடுத்து அவர் வார்த்தைகளில் பெரும் நிதானமிருந்தது. "யுவான், சற்று பொறுமையாகக் கேள். சேரன் தலைநகர் பரலிமா நகரை வெல்வதற்கு உன் தந்தையும் இளையபாண்டியரும் அமைத்த போர் யந்திரங்கள் பெரிதும் உதவின. அந்த யந்திரங்கள் அனைத்தையும் அவர் இந்தக் கோட்டையிலிருந்துதான் உருவாக்கினார். பாண்டியர் படை சேரன் தலைநகரில் தீவிரமாகப் போரில் ஈடுபட்டிருந்த போது போசளர்கள் இந்தக் கோட்டையிலிருந்து யாங்சின்னைச் சிறையெடுத்துப் போனார்கள். ஆனால்..."

"ஆனால் என்ன?"

"உன் தந்தை சிறையெடுக்கப்படுவதற்கு இரு தினங்கள் முன்பு மாறன் அமுதனார் இங்கு வந்து சென்றார். அதன் பிறகு காவலும் சற்று தளர்த்தப்பட்டது..."

கிருஷ்ண மல்லரின் வார்த்தைகள் பாதியில் நின்றன. சிறு விழிகளில் விஷமமும் வழிந்தது.

யுவானின் முகத்தில் வியப்பு படர்ந்தது. "அப்படியானால் என் தந்தை கடத்தப்பட்டது வெறும் நாடகமா?" என்றான் யுவான் வியப்புடன்.

"கடத்தப்பட்டது நாடகமல்ல யுவான். போசளர்கள் அவரைச் சிறைப்படுத்தப் போவதை அறிந்துதான் யாங்சின் அதிக எதிர்ப்புக் காட்டாமல் உள்நோக்குடன் அவர்களுடன் சென்றிருக்க வேண்டும். இதற்கு விளக்கம் அளிக்கக்கூடியவர் இருவர்தாம். ஒருவர் மன்னர். மற்றொருவர் மாறன் அமுதனார்" என்றார் கிருஷ்ணமல்லர்.

"என் தந்தை இருக்குமிடம் உங்களுக்குத் தெரியுமோ?" நேரிடையாகவே வந்தது யுவானின் கேள்வி.

கிருஷ்ணமல்லர் மெல்ல நகைத்தார். "தெரியும்" என்ற பதிலும் வந்தது அவரிடமிருந்து.

யுவான் இருக்கையைவிட்டு வேகமாக எழுந்து கொண்டான். "எங்கிருக்கிறார் என் தந்தை?" வேகத்துடன் வந்தது அவன் கேள்வி.

அதுவரையில் மௌனமாக இருவரின் உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்த ஆதித்யன் "யுவான், சற்றுப் பொறு" என்றபடி எழுந்து யுவானை அமர்த்தினான். யுவானின் மஞ்சள் முகம் மெல்ல சிவக்க முயன்று கொண்டிருந்தது. அவன் விழிகளை உற்றுநோக்கிய ஆதித்யனின் முகத்தில் சற்றுக் கடுமையும் படர்ந்திருந்தது.

"யுவான், இதுபற்றி இந்தக் கோட்டைக்குள் விவாதிப்பது அபாயம். யாங்சின் தமிழகத்தின் விடுதலைக்காகச் செய்ய முற்பட்டிருக்கும் சேவையை உன் அவசரத்தினால் கெடுத்து விடாதே. அவர் இருக்குமிடம் எதுவென்பதை நானும் அறிவேன். பிறகு இதுபற்றி விளக்குகிறேன்" என்ற ஆதித்யன் தொடர்ந்து, "விஜயன் நம்மிடமிருந்து விடைபெறும்போது நான் கூறியது நினைவிருக்கிறதா?" என்றான்.

யுவானின் முகத்தில் சற்று குழப்பமும், தொடர்ந்து சிந்தனையும் படர்ந்தது. சற்று சிந்தித்தவன், "ஆம். அவன் தேடிச் செல்பவரைக் கண்டால் இன்னும் ஒரு திங்களில் போர் தொடங்கும் என்று தெரிவிக்கச் சொன்னீர்கள்" என்றான் சிந்தித்தபடியே.

"அவன் தேடிச் சென்றிருப்பது யாங்சின்னைத்தான்" ஆதித்யனின் பதில் யுவானைத் திகைக்க வைத்தது. யுவான் மேற்கொண்டு ஏதோ பேசத் தொடங்குமுன் அவனைக் கையமர்த்திய ஆதித்யன் "யுவான், இதுபற்றி இந்தக் கோட்டைக்குள் பேசாமலிருப்பது நல்லது" என்றான் மீண்டும்.

## அருள்வாக்கு



ஆத்ம ஜ்யோதிஸை (ஜோதியைப்) பூர்ணமாகப் பிரகாசிக்கச் செய்யவும், துக்கமில்லாமல் இருப்பதற்குரிய ஸாதனங்களைச் சொல்லவும், நமக்கு ஆசாரிய பரம்பரை வேண்டும். ஓர் ஆசாரியர் தமக்குப் பிற்காலத்தில் தம் காரியத்தைச் செய்ய மற்றொருவருக்கு அதிகாரம் கொடுக்கிறார். இப்படி வருபவர்களின் வரிசைதான் ஆசாரிய பரம்பரை. அந்தப் பரம்பரை விஷயத்தில் நாம் நிரம்ப நன்றியுடையவர்களாக இருக்க வேண்டும். ஆத்ம ஜ்யோதிஸை அடைய வேண்டிய மார்க்கமாகிய நிதியைக் காப்பாற்றித் தந்தவர்கள் அவர்களே. யார் யார் மூலமாக இந்த நிதியானது லோகத்தில் இன்று வரையில் வந்திருக்கிறதோ, அவ்வளவு பேரையும் தியானித்தால் அதிக அனுக்கிரஹம் உண்டாகும். ஆகவே குரு பரம்பரா ஞானமானது ஆத்மதத்வத்தில் நாட்டமுடையவர்களுக்கு அவசியம் இருக்க வேண்டும்.

***— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.***

விஜயன் தன்னிடம் தனியே எச்சரித்தது நினைவில் எழுந்தது யுவானுக்கு. "இந்தக் கோட்டைக்குள் ஒற்றர்கள் இருப்பதாக சந்தேகிக்கிறீர்களா?" என்றான் யுவான்.

"சந்தேகமேதுமில்லை யுவான். இங்கு போசள ஒற்றர் இருப்பது நன்றாகவே தெரியும்" ஆதித்யனின் பதில் நிதானமாக வந்தது.

யுவானின் பார்வை படைத் தலைவரையும் ஆதித்யனையும் வெறித்தது. அறைக்குள் நடந்த விவாதத்தை மௌனமாக கேட்டுக் கொண்டிருந்த இளவரசியின் முகத்தில் சற்று அச்சம் படரத் தொடங்கியிருந்தது. "ஏன் அவர்களைப் பிடித்துச் சிறையில் அடைக்கவில்லை?" அவள் கேள்வியிலும் அச்சம் ஒலித்தது.

கிருஷ்ணமல்லர் யுவானையும் இளவரசியையும் பார்த்து மென்ன நகைத்தார்.

"ஏன் நகைக்கிறீர்கள்?" - இளவரசியின் குரல் சூடேறியது.

நகைப்பதை நிறுத்திய கிருஷ்ணமல்லர், "இளவரசி, இங்கிருப்பவர்கள் வெறும் கருவிகள். இவர்களை இயக்குபவன் தொலை தூரத்திலிருக்கிறான். இவர்களைப் பிடித்து அடைத்துவிட்டால் எதிரிகளின் நோக்கம் என்ன என்பது புரியாமல் போய்விடும்" என்றார்.

"நாம் எச்சரிக்கையின்றி இருக்கும்போது ஒற்றர்கள் தங்கள் பணியை நிறைவேற்றிக் கொண்டால்? அல்லது இங்கிருந்து தப்பிவிட்டால் என்ன செய்வது?" - யுவானின் கேள்வியில் பரபரப்பு கூடியிருந்தது.

கிருஷ்ணமல்லர் மீண்டும் இடிஇடியென்று நகைத்தார். "நான் அதைத்தான் எதிர்பார்க்கிறேன் யுவான். போசளருடன் போர் தொடங்க ஒரு காரணம் வேண்டாமா?" என்றவர் மறுபடி நகைத்தார். சற்றுக் கழித்து, "யுவான், இந்தக் கோட்டையிலிருந்து ஏறக்குறைய வட கொங்கு நாட்டின் எல்லை வரையில் கூட நமது வீரர்கள் சாதாரண மக்களாக உலவிக் கொண்டிருக்கிறார்கள். அதுமட்டுமல்ல, கொங்கு மக்களும் ஒரு புரட்சிப் படையை அமைத்திருக்கிறார்கள். இங்கிருந்து தப்பும் எவனும், அவன் போய்ச் சேருமிடம் வரையில் கண்காணிக்கப்படுவது மட்டுமல்ல, எந்த வினாடியிலும் கொல்லப்படுவான்" என்றார்.

பாண்டிய மன்னரும் மாறன் அமுதனாரும் வகுத்துள்ள திட்டத்தில் யாங்சின்னும் தானும் இளவரசியும் ஏன், கிருஷ்ணமல்லரும் ஆதித்யனும் கூட வெறும் கருவிகள்தான் என்பதையும், கிருஷ்ணமல்லரின் சொற்களுக்குப் பின்னால் நீண்ட காலமாகவே வகுக்கப்பட்ட ஆழ்ந்த திட்டமிருக்கிறது என்பதையும் புரிந்துகொண்ட யுவான் அடுத்து வினவினான் : "படைத் தலைவரே! இங்குள்ள ஒற்றர்கள் யாரென்பதை அறிவீர்களா?"

"அறிவேன். அதுகுறித்து உறுதிசெய்து கொள்ளவே இளவரசியாரை இங்கு வரவழைத்தேன்" என்றார் கிருஷ்ணமல்லர்.

இளவரசி விழித்தாள். "இங்குள்ள ஒற்றர்கள் யாரென்பதை நான் உறுதி செய்வதா? எனக்கொன்றும் விளங்கவில்லை" அவள் குரலில்

குழப்பம் ஒலித்தது.

கிருஷ்ணமல்லர் நிதானமாக நகர்ந்து பூங்கோதையின் எதிரில் வந்து நின்றார். "இளவரசி, தங்கள் தந்தை அவந்தரிடம் சூரிய காங்கேயன் என்று ஒரு மெய்க்காவலன் இருந்தது தங்களுக்கு நினைவிருக்கிறதா?" - கிருஷ்ணமல்லரின் குரலில் பெரும் நிதானம் இருந்தாலும் அவர் சித்தம் கனவேகமாக இயங்கிக் கொண்டிருப்பதை பளிச்பளிச்சென்று மின்னிய சிறு விழிகள் நிரூபித்தன.

இளவரசியின் முகத்திலிருந்த குழப்பம் இன்னும் விரிந்தது. "ஆம். நீங்கள் கூறும் பெயரில் ஒரு மெய்க்காவலர் இருந்தார். தந்தையை மட்டுமல்ல, என்னையும் தன் கண்களைப் போலப் பாதுகாத்து வந்தார். அரண்மனைத் தாதிகளிடம் நான் வளர்ந்த நாட்களை விட அவரிடம் வளர்ந்த நாட்கள்தான் அதிகம். தாயற்ற எனக்குத் தாயாகவே இருந்தார். அவருக்கு என்ன நேர்ந்தது?'' - இளவரசியின் குரலில் குழப்பத்துடன் கவலையும் ஒலித்தது.

"இளவரசி. நீங்கள் சூளாமணி விஹாரத்திற்குச் சென்ற பின்பு கொங்கு மண்ணில் போசளர் ஆதிக்கம் பலப்பட்டது. சோழர் உதவியும் கிட்டவில்லை. எனவே உங்கள் தந்தை அந்த சூரிய காங்கேயனிடம் ஓலையொன்றைக் கொடுத்து உதவிகோரி இங்கு அனுப்பினார்'' கிருஷ்ணமல்லரின் விளக்கம் இளவரசியின் கவலையை இன்னும் அதிகரிக்க வைத்தது.

''அப்படியானால் சூரியகாங்கேயன் எங்கே?''

"சற்றுப் பொறுங்கள் இளவரசி" என்ற கிருஷ்ணமல்லர், வாயிலிலிருந்த வீரனை அழைத்தார். உள்ளே நுழைந்து வணங்கிய பாண்டிய நாட்டு வீரனை நோக்கியவர், "வீரனே, நீ சென்று மேற்குப்புறக் காவலர் தலைவனை நான் அழைத்ததாக அழைத்து வா'' என்று உத்தரவிட்டார்.

அவன் சென்ற பின்பு ஆதித்யனை அழைத்தவர், "ஆதித்யா, நீ இளவரசியை அந்த அறைக்குள் அழைத்துச் சென்று விடு. அந்தச் சிலைக்குப் பின்னால் சற்று மறைந்து நில்லுங்கள். உள்ளே வருபவனை இளவரசி நன்றாகப் பார்க்கட்டும்'' என்றார்.

கிருஷ்ணமல்லரின் ஏற்பாடுகள் நன்றாகப் புரிந்தது ஆதித்யனுக்கு. குழப்பம் இன்னும் விலகாததால் அப்படியே அமர்ந்திருந்த இளவரசியின் தோள்களைப் பற்றி எழுப்பியவன், அவளை மெல்ல அருகிலிருந்த அறைக்குள் அழைத்துச் சென்றான். அவர்கள் சென்று சிலையின் பின் மறைந்ததும் யுவானை நோக்கியவர், "யுவான், இப்போது வருபவனை நன்றாகக் கவனித்துக் கொள்'' என்றும் கூறி



"ஹவாலா புகழ் ஜெயின் சகோதரர்களுக்கு நல்லெண்ணப் பரிசு தரப்போறாங்களாம்."

"எதுக்கு?"

"கட்சிப் பாகுபாடு இல்லாமல் எல்லா தலைவர்களுக்கும் லட்சலட்சமா கொட்டிக் கொடுத்துத் தன்னோட நல்லெண்ணத்தைக் காட்டியிருக்காங்களே!"

- சீர்காழி வி. ரேவதி

னார்.

சற்று நேரத்தில் வேகமாக உள்ளே நுழைந்து படைத் தலைவரை வணங்கியவன் காரிருளைக் கடைந்து கருங்காலி மரத்தில் கைகளும் கால்களும் செய்து ஒட்டவைத்தவன் போல இருந்தான். வேங்கையைக் கண்டு அஞ்சுவதாகப் பாசாங்கு செய்யும் நரியின் போலி அச்சமும், சாகசமும் அவன் விழிகளில் தெரிந்தன.

அறைக்குள் மெல்ல உலவிக் கொண்டிருந்த கிருஷ்ணமல்லர் அவன் முகம் அடுத்த அறையை நோக்கி முழுவதும் திரும்பும் வரை உலவி நின்றார். "காங்கேயா, நேற்றிரவு மேற்கு வாயிலில் காவலர் சற்றுக் குறைவாக இருந்ததாகத் தெரிகிறது" - கிருஷ்ணமல்லரின் குரலில் இலேசாகக் கடுமை ஒலித்தது.

கணநேரமே தயங்கிய காங்கேயன், "ஆம் படைத்தலைவரே, காவலர்களில் இருவருக்கு இரு தினங்களாக உடல்நிலை சரியில்லை. எனவே நானே இரவு முழுவதும் விழித்து காவல் புரிந்தேன்" என்றான் அதீதமான பணிவு நிரம்பிய குரலில்.

"சரி காங்கேயா, கிழக்கு வாயிலிலிருந்து நான் கூறியதாகச் சொல்லி இரு வீரர்களை அழைத்துக் கொள். மேற்கு வாயில் எதிர் நோக்கியிருப்பது மலைப்பகுதி. அந்தப் பகுதியில் காவல் குறைவாக இருப்பது கூடாது. புரிந்ததா?" என்றார் கிருஷ்ணமல்லர்.

"உத்தரவு படைத்தலைவரே!" என்று வணங்கிய காங்கேயன், பின்னோக்கி நகர்ந்து பின்பு திரும்பி வெளியேறினான்.

அவன் வெளியேறும்வரை பொறுத்த படைத்தலைவர் சற்றுக் கழித்து, "ஆதித்யா" என்று குரல் கொடுத்தார்.

அடுத்த அறைக்குள் சிலையின் மறைவில் நின்றிருந்த இளவரசிக்கு, அவன் சித்தத்தின் குழப்பத்திற்கும் கவலைக்கும் ஆதித்யனின் அண்மையும் தோள்களில் பதிந்திருந்த அவன் கரங்களும் பெரும் ஆறுதலை அளித்துக் கொண்டிருந்ததால், அவன் அங்கிருந்து நகர முற்படவில்லை. ஆதித்யனுக்கும் படைத்தலைவர் அழைப்புக்கு உடனே செவி சாய்க்கும் எண்ணமிருப்பதாகத் தெரியவில்லை.

"ஆதித்யா!" என்று மீண்டும் ஒலித்தது படைத்தலைவரின் வெண்கலக் குரல். அவர் அழைப்பைத் தொடர்ந்து திருதிருவென விழித்தபடி வெளியே வந்த ஆதித்யனையும், சிவந்து கிடந்த முகத்துடன் பின்னால் வந்து கொண்டிருந்த இளவரசியையும் கவனித்த கிருஷ்ணமல்லரின் யானைக் கண்கள் பளிச்சிட்டு அவற்றில் விஷமம் வழியத் தொடங்கியது. உலக்கை போன்ற இரு கரங்களையும் இடையில் கொடுத்து இருவரையும் ஏற இறங்க ஒருமுறை நோக்கியவர், "ஓகோகோ, அப்படிப் போகிறதா விஷயம்?" என்றார் பலத்த குரலில்.

ஆதித்யனும் இளவரசியும் சங்கடத்தில் தலைகுனிந்து நிற்க, யுவானின் குரல் ஒலித்தது : "ஆம் படைத்தலைவரே, விஷயம் அப்படிப் போய் நாட்கள் நான்கு ஆகின்றன" என்று.

இடிஇடியென்று நகைத்தார் கிருஷ்ணமல்லர். யுவானின் நகைப்பும் சேர்ந்து ஒலித்தது.

நகைப்பதை நிறுத்திய கிருஷ்ணமல்லர் "இளவரசி, இப்போது வந்து சென்றவனை கவனித்தீர்களா இல்லையா?" என்றார் சந்தேகமும் விஷமமும் நிரம்பிய தொனியில்.

இளவரசியின் பதில் மெலிதாக ஒலித்தது : "கவனித்தேன் படைத்தலைவரே!"

"இவன்தான் உங்கள் தந்தையிடமிருந்து ஓலை கொண்டு வந்த மெய்க்காவலன் சூரிய காங்கேயன்" என்றார் கிருஷ்ணமல்லர்.

சட்டென்று நிமிர்ந்தாள் இளவரசி. அவளது முகத்தில் எல்லையற்ற கலவரம் படர்ந்தது.

"இல்லை. இருக்க முடியாது. நான் சூரிய காங்கேயனைக் கண்டு பல ஆண்டுகள் ஆகிவிட்டன. ஆனால் நிச்சயமாக இப்போது வந்தவன் சூரிய காங்கேயனாக இருக்க முடியாது!"

ஏறக்குறைய உச்சத்தில் ஒலித்தது இளவரசியின் குரல்.

(தொடரும்)

# இந்தியா முழுவதும் 108 புண்ணியஸ்தலங்களின்

# புனித யாத்திரை இலவசமாக ...





**பங்கஜம் மாமி**

காயத்திரி எப்படிம்மா இருக்கே?

**காயத்ரி**

வாங்கோ மாமி, உங்கள் ஆசிர்வாதத்தில நல்லா க்ஷேமமா இருக்கலாம் நீங்களும் மாமாவும் சௌக்கியந்தானே ?

**ப. மாமி**

எங்களுக்கு என்ன குறைச்சல், அந்த ஆண்டவன் புண்ணியத்துல நல்லா இருக்கோம், நேற்று நானும் மாமாவும் திருப்பதி போய்ட்டு வந்தோம். இந்த பிரசாதத்தை எடுத்துக்கோடி.

**காயத்ரி**

ரொம்ப சந்தோஷம் மாமி. இருக்கிற குடும்ப பிரச்சனையிலே எங்க மாமி கோயிலுக்கு போக முடியுது. உங்க மாதிரி தெரிஞ்சவா கோயிலுக்கு போய்ட்டு வந்து கொடுக்கற பிரசாதத்திலேதான் அந்த ஆண்டவனை பார்க்க முடியுது.

**ப. மாமி**

ஒரு கோயில் பிரசாதத்துக்கே இப்படி சந்தோஷபடறியே இந்தியா முழுவதும் உள்ள கோயில்கள் அதாவது **பிள்ளையார்பட்டி, மதுரை மீனாட்சி, கன்னியாகுமரி, சபரிமலை, குருவாயூர், திருப்பதி, பாம்பே மகாலஷ்மி, ஷிர்டி சாய்பாபா, கல்கத்தா காளிகாஷ்மீர் பனிலிங்கம்** போன்ற 108 பெரிய **கோயில்ல** உன் பேர்ல அர்ச்சனையும், 108 கோயில் கடவுள் பாதத்துல வச்ச பூஜை செய்த "தங்க நாணயமும்" கொடுத்தா என்ன நினைப்பே.

**காயத்ரி**

என்ன மாமி சொல்றிங்க.. ஆச்சரியமா இருக்கே, நடக்கிற காரியமா இது. கன்னியாகுமரியில இருந்து காஷ்மீர் வரை இருக்கிற 108 கோயிலுக்கு போயிட்டு வர்றதுன்னா எக்கச்சக்கமா செலவாகுமே. நீங்களா மாமி போகப் போறிங்க ?

**ப. மாமி**

இந்த வயசான காலத்துல நாங்க எப்படிம்மா போகமுடியும் நம்ப மாமாவுக்கு ரொம்ப வருஷமா தெரிஞ்ச நல்ல கம்பெனி புதுதிட்டம் ஒன்று அறிவிச்சு இருக்காங்க, பெயர் "வார்ட்சன் குரூப் ஆப் கம்பெனீஸ்" அவங்ககிட்ட டெபாசிட் பன்றவாளுக்கு, அவா அவா பெயர்ல 108 கோயில்ல அர்ச்சனை பண்ணிட்டு, எல்லா கோயில் கடவுள் பாதத்துல வச்ச **"தங்க காசு"** தர்றா.

**காயத்ரி**

மாமி அதெல்லாம் உங்க மாதிரி பணக்காரங்களுக்கு சரிபட்டு வரும் எங்க மாதிரி நடுத்தர குடும்பம் எங்க மாமி டெபாசிட் பன்றது.

**ப. மாமி**

மத்த கம்பெனி மாதிரி லட்சக்கணக்கில் நீ டெபாசிட் பண்ணனும்னு அவசியம் இல்லடி. வார்ட்சன்ல குறைந்தபட்சம் 1,000/- ரூபாயில இருந்து டெபாசிட் ஆரம்பிக்கலாம். 1,000/- ரூபாய் டெபாசிட் பன்றவங்களுக்கு கூட 108 கோயில்ல உன் பெயர்ல அர்ச்சனை பண்ணி, பிரசாதமும் தர்றாங்களாடி. அதோட உன்னோட 1,000 **ரூபாய் 37 மாதத்தில 2,000/- ரூபாயா திருப்பி** தந்துடுவாங்க, கூடவே வெள்ளி குங்குமச்சிமிழ் இலவசமா தர்றாங்களாம். ரூபாய் 10,000 அதுக்கு மேலே டெபாசிட் பன்றவங்களுக்கு 108 கோயில்ல அர்ச்சனை, பிரசாதம், 108 கடவுள் பாதத்தில விசேஷ பூஜை செய்த "தங்க நாணயமும்" நம்ப பணத்துக்கு அதிகபட்ச வட்டியும் + பிரமாதமான ஊக்க தொகையோட திருப்பி தந்துடுவாங்க.

**காயத்ரி**

நீங்கசொல்றது கேக்றத்துக்கு நல்லாதான் இருக்கு. அவங்க 108 கோயிலுக்கு உண்மையில போறாங்களான்னு எப்படி நம்பறது ?

**ப. மாமி**

நல்ல கேள்வி கேட்ட. அவா மார்ச் மாதம் புனித பயணம் புறப்படறபோது நம்மை போல் டெபாசிட் பன்றவங்க பெயர்களை எழுதி, குலுக்கல் முறையில தேர்தெடுத்து கூடவே கூட்டிட்டு போறாங்க. அது மட்டும் இல்லடி "புனித பயணம்" போறதை பதிவு செய்த வீடியோ கேசட், போட்டோகிராப் எல்லாம் அவா ஆபிஸ்ல Display பன்றாங்க. என்டி நமக்கு பத்துகாசு செலவு வைக்காம இத்தனை கோயில்ல நம்ம குடும்பத்துக்காக அர்ச்சனை பன்றதோட நம் பணத்தையும் வட்டியோட திருப்பி தர்றாங்களே.

**காயத்ரி**

இந்த கலியுகத்துலயும் அடுத்தவங்- களுக்காக பிரார்த்தனை செய்து பிரசாதம் தர்றாங்கன்னா நிச்சயம் அவங்க நல்ல கம்பெனியா தான் இருக்கனும். எங்க வீட்டுக்காரர் கிட்ட சொல்லி உடனே டெபாசிட் பன்றேன். அட்ரஸ் தாங்களேன் மாமி.

**ப. மாமி**

உன்னால நேர்ல போகமுடியலேன்னு வச்சுக்க உடனே "வார்ட்சன் பைனான்ஸ்" என்ற பெயரில் D/D, அல்லது செக் எடுத்து கூடவே பெயர், நட்சத்திரம், கோத்திரம் எழுதி அனுப்பினா. அவாளே உன் வீட்டுக்கு 108 கோயில் பிரசாதத்தை அனுப்பி வச்சிடுவா, கூடவே உன் பணத்துக்கு வட்டியோ செக்கையும் அனுப்பி வச்சிடுவாங்க.

Note பண்ணிக்கோடி : "வார்ட்சன் குரூப் ஆப் கம்பெனீஸ்" 7/2, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை, J.P. டவர், 6வது மாடி, D-1, சென்னை - 600 034. Phone : 8280225.

ADVT





1996 பிப்ரவரி 18
யுவ மாசி 6
மலர் : 54
இதழ் : 29

கல்கி
தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## 'தண்ணி' காட்டுகிறார் தேவேகௌடா!

முதல்வர் ஜெயலலிதாவை மனம் விட்டுப் பாராட்ட ஒரு வாய்ப்பை அவர் ஏற்படுத்தித் தந்திருக்கிறார். தேசிய நீராதாரங்கள் கவுன்சில் கூட்டத்தில் பங்கேற்று, தமிழகம் சார்பாக வலுவான, நியாயமான வாதங்களை முன்வைத்திருக்கிறார்.

மாநிலங்களுக்கிடையேயான நதிநீர் பங்கீடு குறித்த வழிகாட்டல் நெறிகளை விவாதித்து முடிவு செய்வதற்கென கவுன்சில் கூடியது. கர்நாடகா அரசு மட்டுமே அந்த நெறிகளை வரவேற்றுள்ளது. வழிகாட்டல் நெறிகளில் சேர்ப்பதற்கு, தன் பங்காக பத்து யோசனைகளையும் முன்வைத்துள்ளது. மேலோட்டமாகப் பார்க்கும்போதே அவை ஒரு தலைப்பட்சமானவை என்பது மிகத் தெளிவாகத் தெரிகிறது.

தமிழக முதல்வரும் இதைத்தான் சுட்டிக் காட்டியிருக்கிறார். வெவ்வேறு மாநிலங்களில் ஓடும் நதிகளின் தன்மையைப் பொறுத்து பகிர்வு முறை வேறுபடும் என்பதால் பொத்தாம் பொதுவில் ஒரு வழிகாட்டு நெறி வகுப்பது சரியல்ல என்றும் கூறியிருக்கிறார். மேற்கு நோக்கிப் பாயும் நதிகளை திசை திருப்புவது; தீபகர்ப்பத்தில் ஒரு நதிநீர் சங்கிலி அமைப்பது போன்ற நீண்ட காலப் பலனளிக்கும் தொலை நோக்கு திட்டங்கள்தான் பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வு என்று உணர்த்தியிருக்கிறார்.

காவிரி நதி நீர் பகிர்வு குறித்து நடுவர் மன்றம் பிறப்பித்த ஆணையை கர்நாடக அரசு இன்னமும் முழுமையாக நிறைவேற்றியபாடில்லை. அதனை நிறைவேற்ற, மாநில முதல்வர்களை அழைத்து வழிகாணுமாறு உச்சநீதிமன்றம் பிரதமருக்கு ஆணையிட்டுள் ளது. அந்த ஆணைக்கும் உரிய மதிப்பு தரப்படவில்லை. 'இத்தகைய சூழ்நிலையில் நதிநீர் பகிர்வுக்கான வழிகாட்டு நெறிகள் குறித்துப் பேசுவதே வியர்த்தம்' என்று முதல்வர் ஆணித்தரமாகச் சொல்லியிருக்கிறார்.

நடுவர் மன்றம் என்பதே முழு அதிகாரங்கள் பெற்ற சுதந்தர அமைப்புதான். அதன் தீர்ப்பை விவாதமின்றி நடைமுறைப்படுத்துவதே நியாயம். அதை விடுத்து, நதிநீர் பகிர்வுக் கான வழிகாட்டு நெறிகள் குறித்து, இப்போது தலைபோகிற காரியமாக விவாதிப்பது, பிரச்னையை திசை திருப்பும் முயற்சியே. நடுவர் மன்ற ஆணையை நிறைவேற்றி, கன்னட வெறியர்களின் கோபத்தைச் சம்பாதித்துக் கொள்ள தேவே கௌடா தயாராயில்லை. அரசியல் ஆதாயம் கருதி இந்த திசை திருப்பலில் ஈடுபட்டிருக்கிறார். ஒரு மூத்த அரசி



நடுவர் மன்றம் என்பதே
முழு அதிகாரங்கள் பெற்ற சுதந்தர
அமைப்புதான். அதன் தீர்ப்பை
விவாதமின்றி நடைமுறைப்படுத்துவதே
நியாயம்.





யல்வாதிக்கு ஏற்ற நடத்தை அல்ல இது. அவரது முயற்சிக்குப் பிரதமரின் ஆசி கிடைத்திருக்கிறது என்பதுதான் வேதனைக்குரிய விஷயம்.

11 டி.எம்.சி. தண்ணீர் விடச் சொல்லி உத்தரவிட்ட நடுவர்மன்ற ஆணையை அமுல்படுத்தாமல், முன்னர் 6 டி.எம்.சி.விடச் சொன்ன பிரதமர், இப்போது இரண்டரை டி.எம்.சி. விடச் சொல்கிறார். இந்த இரண்டரை டி.எம்.சி.யையும் எதிர்காலத்தில் விட வேண்டிய நீரில் குறைத்துக் கொள்ளலாம் என்கிறார். இது எவ்வளவு பாரபட்சமானது!

நதிநீர் பகிர்வு குறித்த பாரம்பரிய உரிமைகளை மதித்து மாநிலங்கள் நடந்து கொண்டால், நடுவர் மன்றங்களுக்கும் உச்சநீதி மன்றத்துக்கும் வேலை இராது. ஆனால், அந்த உரிமைகளை கர்நாடகா அரசு மீறி, பல ஆண்டுகளுக்கு முன்னரே காவிரிக்குக் குறுக்கே பிரும்மாண்ட அணைகளைக் கட்டியது. அப்போது கிளர்ச்சி செய்யாமல் மெத்தனமாக இருந்ததன் பயன்களைத்தான் இப்போது அனுபவித்துக் கொண்டிருக்கிறோம்.

இந்தப் பழைய அனுபவத்திலிருந்து நாம் பாடம் கற்க வேண்டியது அவசியம்.

கர்நாடகா அரசு, கிருஷ்ணபாக்யா ஜல நிகாம் என்ற மாபெரும் திட்டத்தை இப்போது தீட்டியிருக்கிறது. பங்குச் சந்தையில் இறங்கி, பலகோடி சேகரித்து, கிருஷ்ணா நதிக்குக் குறுக்கே இரு ராட்சத அணைகளைக் கட்டவிருக்கிறது. இந்தத் திட்டம் மட்டும் முடிவடைந்தால் ஆந்திர மாநிலத்துக்குக்கூட போதுமான அளவு கிருஷ்ணா நதி நீர் கிடைக்குமா என்பதே சந்தேகம்தான். அப்புறமல்லவா சென்னைக்குக் குடிநீர்!

தமிழக அரசு விழிப்புடன் இருந்து, காவிரி நடுவர் மன்றத் தீர்ப்பை அமுல் படுத்தும்படி வலியுறுத்த வேண்டும். கிருஷ்ணபாக்யா ஜல நிகாம் திட்டத்தினால் மேலும் புதிய பிரச்னைகள் எழ விடாமல் ஆந்திர அரசுடன் இணைந்து உடனடியாகச் செயல் பட வேண்டும்.

# காணாமல் போகும் நோய்கள்!

"குழந்தையின் உடம்பு இளைத்து மிகவும் பலவீனமாக இருக்கிறதே. என்ன டானிக் தரலாம்?"

"டானிக் ஒண்ணும் வேணாம். கருப்பட்டி, கடலைப் பிண்ணாக்கு, பொட்டுக் கடலை, மூணையும் சம அளவுலே எடுத்து இடிச்சு வச்சு, தினமும் காலையிலே ஒரு ஸ்பூன் கொடு. ஒடம்பு எப்படி ஆகுதுன்னு பாரு..."

இப்படிச் சொல்கிறவர் ஒன்றும் நாட்டுவைத்தியர் இல்லை; ஆங்கில மருத்துவம் அறிந்து, மருத்துவத் துறையில் உயர் பதவி ஒன்றில் இருந்து ஓய்வு பெற்ற பிறகும் 'இளமைத் துடிப்போடு' பணியாற்றுகிற டாக்டர் கங்காதர சர்மாதான். "இந்தக் கலவை புரதச்சத்து மிகுந்தது!" என்கிறார் அவர்.

தாம்பரம் இந்து மருத்துவமனையை நிறுவுவதற்குத் திட்டமிட்டுப் பணியாற்றி வெற்றி கண்ட ஆறு பேரில் இவரும் ஒருவர். 'சர்மா டாக்டர்' என்று எல்லோராலும் அழைக்கப்படும் இவர், வேதகாலத்து ரிஷிகளை நினைவூட்டுகிற மாதிரி நீண்ட தாடியுடன் வைத்தியம் பார்க்கும் அழகே அலாதியானது. தொழுநோய் ஒழிப்புப் பணியில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டுள்ள 'சர்மா டாக்டர்' தாம்பரம் உள்ளடங்கிய தென் சென்னை வட்டாரத்தில் மிகப் பிரபலம்!

மருத்துவமனையின் தலைவரே அப்படியிருந்தால் மற்ற பணியாளர்கள் எப்படியிருக்க வேண்டும்? எதிர்பார்ப்புக்குக் கொஞ்சமும் குறைவில்லாமல், அன்போடும் பரிவோடும் நோயாளிகளைக் கவனிக்கும் பாங்கு, எதற்கும் 'இனாம்' கேட்காத ஒரு கம்பீரம், உறவு முறை வைத்து,'தாத்தா, பாட்டி', என்றெல்லாம் அழைத்து நோயாளிகளுக்குச் சிகிச்சையளிக்கும் பரிவு என்று அடுக்கிக் கொண்டே போகலாம்.

அன்று பார்வையாளர் பகுதியில் அமர்ந்திருந்த ஒரு மூதாட்டி சொன்னது : "இங்கே வந்தா என்னவோ கோவிலுக்கு வர்ற மாதிரிதான் தோணுது. ஆஸ்பத்திரின்னு சொன்னா யார் நம்புவாங்க?"

இது நிஜம். காலை ஏழரை மணிக்கு அவ்வளவு பேரும் வராந்தாவில் கூடி நின்று, பிரார்த்தனையில் சில நிமிடங்கள் ஒன்றுகிற அழகு. தினமும் சாணம் தெளித்துக் கோலம் இடுகிற நுழைவாயில். அருகிலேயே அரசமரத்தடி மேடை ஒன்றில் அருள்பாலிக்கும் விநாயகர் என்று வித்தியாசமான மருத்துவமனை இந்த இந்து மிஷன் மருத்துவமனை.

சென்ற ஆண்டின் தொடக்கத்தில் ஏதோ ஒரு 'பிஸினெஸ்' தொடர்பாகக் கூடுவாஞ்சேரி சென்றார் ஒரு ஜெர்மானியர் - ஹெல்மர் டீஸ்லார். அவர் கண்ணில் பட்டது இந்த மருத்துவமனை. உள்ளே வந்து சாதாரணமாகப் பார்த்திருக்கிறார். அவர் மனசைக் கவர்ந்தது இது. விளைவு? அடுத்த முறை குடும்பத்தோடு அவர் சென்னைக்கு வந்த போது ஒரு கணிசமான தொகையை நன்கொடையாக வழங்கித் தம் மகிழ்ச்சியையும் பாராட்டையும் தெரிவித்திருக்கிறார் அவர். இப்படிப் பலர் இன்றைக்கு உதவுகிறார்கள்.

பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் மத்தியப் பாதுகாப்பு அமைச்சகம் வழங்கிய அரை ஏக்கர் நிலப்பரப்பில், மிகச் சிறிய கொட்டகையில் எளிமையாகத் தொடங்கப்பட்டது இந்த மருத்துவமனை. இன்று ஆலமரமாய் வளர்ந்து பல துறைகளில் கிளை படர்ந்து, இன்னும் பிரும்மாண்டமாய் வளரக்கூடிய நம்பிக்கையோடு இயங்குகிறது 'இந்து மிஷன் ஆஸ்பத்திரி.'

தேசியத் தொழு

• இந்து மிஷன் மருத்துவமனை





நோய் ஒழிப்புத் திட்டத்தில் இந்த மருத்துவமனை ஈடுபட்டு, கிராமம் கிராமமாகப் போய்ப் பார்வையிட்டு, அரும்பணி ஆற்றியிருக்கிறார்கள். நூறு கிராமங்களில் 2.3 லட்சம் மக்களைச் சோதனை செய்து எட்டாயிரம் பேருக்கு மேல் அறிகுறி கண்டதில், மருந்துகள் மூலம் வெறும் 150 பேராக நோயாளிகளின் எண்ணிக்கையைக் குறைக்க முடிந்திருக்கிறது. அதே போல் 165 பள்ளிக் கூடங்களில் 59,000 குழந்தைகளைச் சோதித்து 140 குழந்தைகளிடம் மட்டும் நோய் அறிகுறி இருந்து குணப்படுத்தி இருப்பது குறிப்பிடத்தக்க சாதனை!

கண்புரை நோய், இயல்பான மகப்பேறு எல்லாவற்றுக்கும் ஒட்டுமொத்தமாக ஐநூறு ரூபாய் மட்டுமே பெற்றுக் கொண்டு மருந்து, மருத்துவ உதவி எல்லாச் செலவுகளையும் ஈடு செய்து கொள்கிற 'பாக்கேஜ்' முறையை இங்கு அறிமுகப்படுத்தியிருக்கிறார்கள்.

இங்கே மகப்பேறு மருத்துவம் குறிப்பிட்டுச் சொல்லப்பட வேண்டியதாய் உள்ளது. எடுத்தவுடன் 'சிசேரியன்' என்கிற முறையை இங்கு காண முடியாது. "அவசரப்படாமல், பொறுமையாகச் சோதித்து, தாயின் உடல் நிலையைப் பொறுத்து தவிர்க்க முடியாது என்றால் மட்டுமே சிசேரியன் முறையைக் கையாள வேண்டும்!" என்கிறார்கள்.

"சாதாரணமாக இடுப்பு எலும்பு அமைப்பு வித்தியாசமாக இருந்தாலும், காப்புத் திரவம் முழுவதும் வெளியேறி வறட்சி ஏற்பட்டாலும்தான் சிசேரியன் தவிர்க்க முடியாததாகிறது. மற்றபடி இயல்பான பேறுகாலம் சாத்தியமானதே" என்கிறார்கள்.

முழுமையான வளர்ச்சி பெறாமல் 'அவசரப்பட்டுப்' பிறக்கும் குழந்தைகளுக்குப் புத்துயிர் ஊட்டும் கருவிகள், இன்குபேட்டர்கள் என்று நவீன வசதிகள் கொண்ட துறை இது.

பிறந்த குழந்தையைத் தாயின் அரவணைப்பிலேயே எப்போதும் வைத்திருக்க வேண்டுமென்கிற அழுத்தமான கருத்து உடையவர்கள் இவர்கள். எனவே, சில மருத்துவமனைகளைப்போல் பிறந்த குழந்தையைத் தனிமைப்படுத்தி, பாலூட்டும் போது மட்டும் அருகில் விடுவது என்கிற முறை இங்கில்லை. அதே போல் தாய்ப்பால் புகட்டுவதன் அவசியம் பற்றி இவர்கள் சொல்லும் அறிவுரைகள் ஒரு தாய் மகளுக்குச் சொல்வது போல் இருக்கின்றனவே தவிர, வெறும் இயந்திரத்தனமான மருத்துவ அறிவுரைகளைப் போல் இல்லை.

சுற்றியுள்ள சமுதாயமே தன்னுடைய வட்டாரத்தின் மருத்துவத் தேவைகளையும் கவனித்துக் கொள்ளவேண்டும் என்கிற பரந்த நோக்கோடு தொடங்கப்பட்டது இந்த மருத்துவமனை. மதம், ஜாதி, அந்தஸ்து, பணம் என்கிற உணர்வுகள் இதுபோன்ற மருத்துவமனைகளில் காணாமல் போய் விடுகின்றன. அப்புறம் நோய்கள் காணாமல் போகக் கேட்பானேன்!

— சுப்ரபாலன்

# KALKI SHOPPING PAGE

# KALKI SHOPPING PAGE

## பத்மஸ்ரீ பேர்ல்ஸ்

பிரத்யேகமான ஹைதராபாத் முத்து
மற்றும் கல் விற்பனையாளர்

உங்களின் பிறந்த தேதியும், ஜென்ம நட்சத்திரத்தையும், ஜாதகத்தையும் மூலமாக வைத்து ஏற்ற கல்லை தேர்ந்தெடுக்கலாம். நீங்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட கல்லை தங்கம் அல்லது வெள்ளி மோதிரங்களில் ஆர்டரின் பேரில் செய்து தரப்படும்.

**Exclusive Pearls & Gemstones Showroom**
**PADMASHRI PEARLS**
**53, North Usman Road,**
**(Opp. to A.R.R. Complex)**
**T. Nagar, Madras - 600 017.**
**Phone : 8234060**

Hyderabad Show Room :
Padmashri Pearls, M.G. Road,
Secunderabad - 3.
Phone : 841936, 7702594

## WANT TO PURCHASE QUALITY SUNGUDI SAREES?

**VISIT**

**MADURAI TEXTILES**
2, SIVAPRAKASAM ROAD,
PONDY BAZAAR,
MADRAS-17.
(NEAR AGASTHIYAR TEMPLE)

**YOU GET**

**RANEE SAREES**
**SAKUNTHALA SAREES**

## மணமக்கள் தேவை
## கம்யூட்டர் ஜாதகம்

அனைத்து சமூகத்திலும், ஆயிரக் கணக்கான வரன்கள் பெற உடன் பதிவு செய்ய தொடர்பு கொள்ளவும்.

கம்யூட்டர் ஜாதகங்கள் நொடிப் பொழுதில் ஆங்கிலம், தமிழ் ரூ. 50/-
எதிர்கால கணிப்புடன் ரூ. 150/-
ஆண்டு பலன் : ரூ. 50/-
கல்யாண பொருத்தம் : ரூ. 50/-
Numerology prediction : Rs. 50/-
ASTROLOGY SOFTWARE FOR SALE.

**ஸ்வயம்வராலயா**

(GOVT. REGD.)

18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம்,
சென்னை - 33. போன் : 425822,
7-ஏ, சாந்தி வஹார் காம்ப்ளக்ஸ், லஸ்,
சென்னை - 4. போன் : 846278,
88, 1, 16th Cross, 6th Main, Malleswaram,
Bangalore - 560 055. Ph. : 3340146

## காந்த சிகிச்சை

நாட்பட்ட நோய்கள், மாதவிலக்கு பிரச்சினை, ஆஸ்துமா, மூட்டுவலி, வலிப்பு நோய்கள், சிறுநீரக கற்கள், பித்தப்பை கற்கள் ஆப்பரேஷன் இன்றி முற்றிலும் குணம் பெற அணுகுங்கள்.

காந்த நீர் கலபமாக தயாரிக்க
MAGNETIC JUG கிடைக்கும்.
முன் அனுமதி பெற போன் : 831141

**Sakthi Nature Cure Research & Service Centre,**



ஜி. வீரமணி

**SAKTHI ENTERPRISES,**
**1, Y.M.C.A. Building,**
**Royapettah,**
**Madras - 600 014.**




# விடை கிடைக்காத கேள்வி!

விழாவில் அமெரிக்க தேசிய கீதம், இந்திய தேசிய கீதம் என இரண்டுமே இசைக்கப்பட்டதால், ஏதோ அமெரிக்க நாடே முன்வந்து ஜெவுக்கு 1995ம் ஆண்டின் சிறந்த பெண்மணி விருதை வழங்கியிருக்கிறதோ என்று பலரும் ஆச்சரியப்பட்டார்கள்.

அமெரிக்கத் தூதரகத்தில் விசாரித்த போது, 'இந்த விருதுக்கும் அமெரிக்க அரசுக்கும் எந்த விதமான சம்பந்தமும் இல்லை' என்றார்கள்.

'விருதை வழங்கியவர் அமெரிக்காவிலுள்ள இலினாய்ஸ் மாநில செனட்டர் ஹோவர்டு காரல் அல்லவா?' என்றபோது, 'அமெரிக்காவில் செனட்டர் என்பது முன்பு தமிழக மேல்சபையில் எம்.எல்.சிக்கள் இருந்தார்களே, அது போன்ற பதவிதான். அவர்களை, விருது வழங்கும் விழாவை நடத்தியவர்கள் தனிப்பட்ட முறையில் அழைத்து வந்து விருது தரச் செய்திருக்கிறார்களே தவிர, அவர்கள் வந்தது அரசு முறைப் பயணமாக அல்ல' என்று தெளிவாக்கினார்கள்.

தெற்காசிய நாட்டோரின் சங்கங்கள் சார்பாக உலகத் தமிழ் இளைஞர்கள் கூட்டமைப்பு, விழாவுக்கு ஏற்பாடு செய்திருந்தது. எந்தச் சிறப்பம்சத்தின் அடிப்படையில் ஜெவுக்கு 'சிறந்த பெண்மணி' விருது வழங்கப்பட்டது என்பதை அறிய உலகத் தமிழ் இளைஞர்கள் கூட்டமைப்பின் தலைவர் டாக்டர் விஜய் பிரபாகரையும் செயலாளர் பார்த்திபன் சண்முகத்தையும் சந்திக்க முயன்றோம்.

அவர்கள் தங்கியிருந்த பார்க் ஷெரட்டன் (நட்சத்திர) ஹோட்டலில் 2619ம் அறைக்கு டெலிபோன் செய்து பேசிய போது, "அவர்கள் காலையில்தான் தாஜுக்குப் போய் டிபன் சாப்பிட்டு விட்டு மகாபலிபுரம் போய்விட்டார்கள்!" என்றது மறு முனை.

"மீண்டும் எப்போது வருவார்கள்?"

"அவர்கள் இரவு அங்கேயே தங்கிவிட்டுக் காலையில் அங்கிருந்தே புறப்பட்டு ஏர்போர்ட் போய் பெங்களூர் விமானம் பிடிக்க இருக்கிறார்கள்!"

"பார்க்கவே முடியாதா?"

"முடியாதே!"

"சரி, உங்கள் பெயர்?"

"அருள்மணி."

எதற்கும் நேரிலேயே போய்ப் பார்ப்போம் என்று ஹோட்டலுக்குச் சென்றோம்.

லிஃப்டை விட்டு வெளியில் வந்து 2619ம் எண் அறை நோக்கிச் சென்ற போது வழியிலேயே மடக்கினார் சூட் போட்ட ஒருவர்.

அறிமுகப்படுத்திக் கொண்ட போது, "அவர்கள் இருவருமே இப்போது மீட்டிங்கில் இருக்கிறார்கள். எந்தக் காரணம் கொண்டும் தொந்தரவு செய்யக் கூடாது என்று சொல்லியிருக்கிறார்கள்!" என்றார்.

"பேட்டி இப்போது வேண்டாம். அப்பாயின்மென்ட் ஃபிக்ஸ் பண்ணிச் சொல்லுங்கள்; அப்போது வருகிறோம்."

"அதெல்லாம் முடியாது."

"உங்கள் பெயர்?"

"அருள்மணி." ('தொலைந்து போனவர்கள்' சீரியலில் நடித்த நாயகர்களில் ஒருவர்தான்!)

எங்களது வாக்குவாதத்தை அருகில் நின்று கவனித்துக் கொண்டிருந்தார் ஜே.சி.டி. பிரபாகரன் (முன்னாள் வில்லிவாக்கம் எம்.எல்.ஏ. — அ.தி.மு.க.). "பத்திரிகையாளர்களிடம் இப்படியா பதில் சொல்வது?" என்று அருள்மணியைக் கடிந்து கொண்டார்.

"இப்போது நான் அரசியலில் இல்லை. நீங்கள் தேடி வந்துள்ளவர்கள் எனது நண்பர்கள். அதனால்தான் நானும் அவர்களைப் பார்க்க வந்திருக்கிறேன். உங்களுக்கு அப்பாயின்மென்ட் வாங்கித் தருவது என் பொறுப்பு. நானே உங்களுக்கு போன் செய்து நேரம் சொல்லச் சொல்கிறேன். இல்லையென்றால் நாளை காலை ஒன்பது மணிக்கு அருள்மணிக்கு போன் செய்யுங்கள். நேரம் சொல்லி விடுவார்!" என்று உறுதி கூறி அனுப்பிவைத்தார்.

மறுநாள் டயல் செய்து செய்து பார்த்ததுதான் மிச்சம்; அருள்மணியே அங்கு இல்லை. "நான் மனோஜ் பேசுகிறேன். நானும் அவர்களைப் பார்ப்பதற்காகத்தான் காத்திருக்கிறேன்!" என்கிற பதிலே திரும்பத் திரும்ப வந்தது.

ஏதோ தப்பு செய்துவிட்ட மாதிரி இப்படி ஓடி ஒளிய வேண்டிய அவசியம் என்ன என்பது இன்னும் நமக்குப் புரியவில்லை.

**— இளங்கோவன்.**

படம்– நன்றி : **தினமலர்**

- அகில்



" அப்பவே சொன்னேன்! முகூர்த்தத்தை வோர்ல்ட் கப் ஃபைனல்ஸ் அன்னிக்கு வைக்க வேணாம்னு!"






"ஒண்ணுமில்லே.... கொஞ்சம் ஞாபக மறதி!"






## திவ்யா

# பறக்கும் ஆசைகள்

மினுக் மினுக்கென்று பச்சையும் சிவப்புமாய் விளக்குகள் மின்னப் பறந்து கொண்டிருந்த அந்த விமானத்தையே உற்றுநோக்கிக் கொண்டிருந்தாள் சாந்த்னி.

"நல்லாத்தான் பேர் வெச்சிருக்காங்கப்பா உனக்கு சாந்தினின்னு... எப்பப் பார் வானத்தையே பார்த்துக்கிட்டிரு... யாராவது ப்ரின்ஸ், சந்திரன்லேர்ந்து பறந்து வந்திட்டிருக்கானான்னு பார்க்கறீங்களாக்கும் மை டியர் ப்ரின்ஸஸ்?"

அவளை உலுக்கிக் கீழே இறக்கி வந்தாள் ராதிகா.

உண்மைதான். அடிக்கடி கற்பனைகளில் தொலைந்து விடுபவள்தான் இந்த சாந்த்னி. அழகாக இருப்பாள்.

தான் அழகு என்ற 'துளி' கர்வமும் அவளிடம் இருந்தது. எனவே தனக்கு வரும் கணவன் 'அப்படி இருக்க வேண்டும்' 'இப்படி இருக்க வேண்டும்' என்று கற்பனைக் கோட்டைகளைக் கட்டுவதும் அதிகமாகவே இருந்தது.

அவளுடைய கற்பனைகள் வார்த்தைகளில் வெளிப்படும் போது பொறுமையுடன் - அதே சமயம் ரசனையுடன் கேட்டுக் கொள்பவள் ராதிகாதான் - அவளின் நெருங்கிய தோழி.

"காஷ்மீர் கி கலி'ல ஷம்மி கபூர் பாடறாப் போல உன்னைப் பார்த்து டூயட் பாடணுங்கற... ம்?"

அதில் வரும் 'தாரீஃப் கரூம் க்யா உஸ்கி...' என்ற பாடலைப் பாட ஆரம்பித்தாள் ராதிகா.

"ச்சீ... கிண்டல் பண்ணாத ராக்கி.. அப்படில்லாம் ஒண்ணும் பாட வேண்டாம்... பழைய ஹிந்திப் பாடல்கள் எனக்குப் பிடிக்கற மாதிரி அவருக்கும் பிடிச்சாப் போதும்."

"நீ வேணாப் பாரு.. ஷம்மி, ஷர்மிலா தாகூரை அந்தப் படத்தில கத்தி கத்தி வந்த மாதிரி, உன்னைச் சுத்தி, சுத்தி வரப் போறான் பாரு உன் ஹஸ்பண்ட்... ஆனா ஒண்ணு... பதினொரு மணி வரைக்கும் 'சாயா கீத்'தும் 'ஆப் கி ஃபர்மாயிஷ்'ம் கேட்டுட்டு தான் தூங்கப் போவேன்னு வெறுப்பேத்திடாதம்மா... பாவம்!"

"ச்சீ.."

"உங்கம்மா என்னை உதைக்கப் போறாங்க!" பயந்தாள் ராதிகா.

"கவலைப்படாதே.. எங்கம்மா அதெல்லாம் கண்டுக்க மாட்டாங்க."

"அப்ப.. இன்னும் கொஞ்சம் ஓட்டலாங்கற... சரி... உன்னோட 'அவரை'ப் பத்தி இன்னும் என்ன என்ன கற்பனைகள்... சொல்லு."

"ம்... வைரமுத்துவின் வரிகளையும் இளையராஜாவின் இசையையும் ரசிக்கணும்.... அப்புறம்... எஸ்.பி.பியை நான் 'என்னமா பாடறான் பாரு, குண்டு கத்திரிக்கா'ன்னு செல்லமா கிண்டினா... போட்டோலதான்... கோபிச்சுக்கக் கூடாது."

"வேற ஏதாவது பாக்கி இருக்கா?"

"ம்... ம்... முக்கியமான ஒண்ணு... ம்.. அங்க பார்த்தியா டேக் ஆஃப்?" என்று தொலைவில் ஏர்போர்ட்டிலிருந்து காற்றைக் கிழித்துக் கொண்டு கிளம்பிய ஒரு விமானத்தைக் காட்டிச் சொன்னாள் சாந்த்னி.

"அதை மாதிரி பறக்கணும்... புரியலை? அவருக்கு நல்லா பைக் ஓட்டத் தெரியணும்! நான் அவர் பின்னால உட்கார்ந்துட்டு, தலை முடி பிச்சுக்க... சூப்பர் ஸ்பீடுல பறக்கணும்!"

அந்த விமானம் மேலே பறந்து கொண்டிருந்தது.

சாந்த்னியின் அப்பா ஒரு போட்டோவோடு வந்தார்.

"இந்த போட்டோவைப் பாரும்மா சாந்த்னி... பையனை உனக்குப் பிடிச்சிருக்கா சொல்லு... இருபது, இருபத்தஞ்சு ஜாதகம் பார்த்து கடைசில இது ஒண்ணுதான் பொருந்தியிருந்தது."

நெஞ்சு படபடவென்று அடித்துக் கொள்ள, போட்டோவை வாங்கிப் பார்த்தாள் சாந்த்னி. போட்டோவில் நன்றாகவே இருந்தான் அவன்.

"பையனைப் பத்தி விசாரிச்சேன்... தங்கமான பையனாம்..."

"............"

"சின்ன வயசிலேருந்தே நல்லா படிப்பானாம்... பேருக்கு பின்னால சி.ஏ., ஐசிடபிள்யூஏ, சிஎஸ்ஏ... இன்னும் நிறைய க்வாலிபிகேஷன்ஸ்... இன்னும் ஏதோ படிச்சிட்டிருக்காராம்... ஹிந்துஸ்தான் லீவரில் ஸீனியர் பொஸிஷன்ல இருக்கார்!"

"........"

"மத்த பசங்க மாதிரி பார்க்லயும் பீச்லயும் சுத்திகிட்டு அலையாம, வாழ்க்கைல முன்னுக்கு வரணுங்கற வெறியோட உழைச்சிருக்கறதாலதான்... கம்பெனிலேயே கார் குடுத்துருக்காங்களாம்... அதுவும் டிரைவரோட...



பொன்னு கண்ணுக்கு லட்சணமா இருக்கணும்னு சொன்னாங்களாம்... வேறே கண்டிஷன்ஸ்லாம் இல்லே... இந்த ஜாதகம் பொருந்தினது நம்ம சாந்த்னியின் அதிர்ஷ்டம்னு தான் சொல்லணும்."

சாந்த்னி துவண்டு போனாள் மனதிற்குள்.

ரேடியோ கூட கேட்க மாட்டானாமே? இவன் எங்கே முகம்மது ரஃபியையும் இளையராஜாவையும் கேட்டிருக்கப் போறான்...? கார் இருக்காமே கார்... யாருக்கு வேணும்...? பைக் கூட ஓட்டத் தெரியாத பயந்தாங்கொள்ளியா இருப்பான் போலருக்கு... உயிர் வெல்லக் கட்டி!

"ஃபார்மலா பொண்ணு பார்க்கறதெல்லாம் வேணாம், ஒரு சவினிங் எங்கயாவது மீட் பண்ணிப் பேசலாம் அப்படீங்கறார். உனக்கு ஒன்னும் ஆட்சேபனை இல்லையே?"

"இல்லப்பா" என்று அவசரமாகச் சொல்லி விட்டு எழுந்து போனாள். மனசுக்குள் குழப்பமாக இருந்தது.

அவளுக்குப் படபடப்பாக இருந்தது. ஐந்தரை ஆக இன்னும் நூற்றிப் பதி மூன்று விநாடிகள் இருக்கின்றன. ஐந்தரைக்குத்தான் அவன் வருவதாகச் சொல்லியிருந்தான். கோவிலில் இன்னும் கூட்டம் வர ஆரம்பிக்கவில்லை. சூடு தேங்கியிருந்த கருங்கல் தரையில் தொடர்ந்து உட்காரச் சிரமமாக இருக்கவே, எழுந்து கொண்டாள்.

"ஸாரி. லேட் ஆக்கிட்டேனா?"

சட்டென்று எதிரே உதித்தவன், பனிச்சென்று துடைத்த சிலை போல கம்பீரமாக இருந்தான்.

"நீங்கதானே சாந்த்னி?"

"உம்."

"ஐ'ம் பிரகாஷ். அதுல பாருங்க, ஒரு படை திரட்டிட்டு வந்து, சந்தைல மாடு பிடிக்கறாப்பல பொண்ணு பார்த்துட்டு, டிபன் தின்னுட்டு, ஒரு அபத்த சஸ்பென்ஸ் வெச்சி, லெட்டர் போடறதா சொல்லி, எழுந்து போற அயோக்கியத்தனத்தை செய்ய எனக்கு விருப்பமில்லை. அதான், உங்க அப்பாகிட்ட, 'உங்க பொண்ணை எதாவது கோவிலுக்கு கூட்டிட்டு வாங்க, பார்த்துப் பேசிடறோம், ரெண்டு பேரும். ஒத்துப் போகும்னு தோணிச்சின்னா ஓகே. இல்லைன்னா 'பை' சொல்லிட்டு போயிடலாம்' அப்படீன்னேன்."

அவளுக்கு என்ன பேசுவதென்று புரியவில்லை. அவனே தொடர்ந்தான் :

"அஃப்கோர்ஸ், பத்து நிமிஷமோ, இருபது நிமிஷமோ இப்ப நாம பேசப் போறதுல பெரிசா ஒண்ணும் அபாரமா புரிஞ்சுக்க முடியாதுதான். ஆனா, அடிப்படை விஷயங்களில் குறைந்தபட்ச ஒற்றுமையாவது இருக்கான்னு பார்த்துடலாம் இல்லியா?"

"உம்."

"உங்களுக்கு ம்யூஸிக் பிடிக்குமா?"

"உம்!"

"கர்னாடிக் ஆர் வெஸ்டர்ன்?"

"ரெண்டும். எஸ்.பி.பி.ன்னா உயிர்."

"அப்படியா? வேறென்ன பிடிக்கும்?"

"மொஹம்மட் ரஃபி, ஆஷா போன்ஸ்லே, வைரமுத்து, இளையராஜா..."

"வாவ்!"

"உங்களுக்குப் பிடிக்குமா?"

"எங்கங்க! உட்கார்ந்து கேக்கணும்னு ஆசைதான். செலக்ட்

பண்ணி ரசிக்க விருப்பம்தான். நேரம் ஏதுங்க? உலகத்துல பேய், பூதம், பிசாசு, குட்டிச்சாத்தான் எல்லாம் நிஜமா இருக்கோ இல்லையோ - சி.ஏ.ன்னு ஒரு படிப்பு இருக்கறது நிஜம்! படிப்பு முடியற வரைக்கும் வேற கவனம் இல்லாம இருந்தேன்."

அவளுக்குச் சப்பென்று இருந்தது. அவனே தொடர்ந்தான் :

"அதுல பாருங்க, இந்தக் காலத்துல பெரும்பாலும் கனவுகள்லேயே நாம வாழ்க்கையைக் கரைச்சிடறோம். தரையில கால் பாவாம நடக்கணும்னு விரும்பறோம். சிம்மாசனத்துல உட்கார வெச்சி, ரெண்டு பக்கமும் மயிலிறகால யாராவது விசிறணும்னு ஆசைப்படறோம். தப்பில்லை! ஆனா, அதுக்குக் கஷ்டப்படணும். எனக்கும் ரொம்ப ஆசைங்க! ம்யூஸிக் கத்துக்கணும், கவிதை ரசிக்கணும்... பெயிண்டிங் கத்துக்கணும். வரப் போற மனைவியை அப்படியே மானசீகமா வரைஞ்சி, பிரிண்ட் அவுட் எடுத்து வந்ததும் ஒப்பிட்டுப் பார்க்கணும்... சின்னச் சின்னதா நிறைய ஆசை!

'ஆனா இதெல்லாம் எப்ப வேணா சாத்தியம், முதல்ல லைஃப்ல செட்டில் ஆகறது முக்கியம்டா'ன்னு எங்கப்பா சொன்னார். யதார்த்தத்தைப் புரிஞ்சி, ஒத்துக்கறது கொஞ்சம் சிரமம்தான்... நீங்க சிந்துபைரவி படம் பார்த்திருக்கீங்களா? டீவில ஒருதரம் எதேச்சையா நான் பார்த்தேன்... அதுல ஒரு இடம்... சிவகுமார், லதாமங்கேஷ்கரோட பாட்டு கேட்டுட்டிருப்பாரு. அந்த ஹீரோயின்.. பேர் தெரியலை... மிக்ஸி போடுவாங்க... அவர் கோபத்துல எழுந்து வந்து திட்டுவாரு. அதுக்கு இவங்க 'லதா மங்கேஷ்கரா பருப்புப் பொடி அரைச்சுத் தருவாங்க?'ன்னு கேப்பாங்க பாருங்க, அசந்துட்டேன்! அதாங்க யதார்த்தம்! அந்த சீனுக்கு அப்புறம் நான் படம் பார்க்கலை. எழுந்து படிக்கப் போயிட்டேன். பாலசந்தரா வந்து எனக்காக சி.ஏ. எழுதப் போறாரு?"

பளிச்சென்று சிரித்தான். சாந்தினிக்கும் சிரிப்பு வந்தது.

மொட்டை மாடியில் ராதிகா கேட்டாள்.

"என்னடீ, பையன் எப்படி?"

"ப்ச்."

"ரசனை இருக்கா? இளையராஜா பிடிக்குமாமா?"

"ப்ச்."

"எஸ்பிபி?"

"ம்ஹூம்!"

"ஷம்மி கபூராட்டம் கத்தி வர சான்ஸ் இருக்கா?"

"தெரியலை."

"பைக் ஓட்டத் தெரியுமாமா? ரொம்ப முக்கியமாச்சே உனக்கு?"

"தெரியாதுன்னு நினைக்கறேன்."

"அப்ப பூட்டகேஸ்! பிடிக்கலைன்னு சொல்லிட்டு வந்துட்டியா? பாவம்!"

"இல்லை."

"பின்னே?"

"மெட்ராஸ்ல சத்திரம் கிடைக்கறது கஷ்டம்; கல்யாணத்தை எதாவது கோவில்ல வெச்சிக்கலாமான்னு கேட்டேன்."

"அடிப்பாவி, என்னாச்சு உனக்கு?"

"யதார்த்தத்தைப் புரிஞ்சுக்கறது கஷ்டம்னு அவர் சொன்னார். ஆனா எனக்குப் புரிஞ்சிடுச்சி!"

"எனக்குப் புரியலை!"

"புரியலை? லதாமங்கேஷ்கர் பருப்புப் பொடி அரைச்சித் தர மாட்டா."

"என்னது?"

"ஒண்ணுமில்லை!" என்று சிரித்தாள் சாந்தினி.

ஒரு விமானம் தாழப் பறந்து தரையைத் தொட்டது.

## 'சுருக் நறுக்' - 15 முடிவுகள்

### சிரிப்பு என்பது....

- யாரும் பறிக்க முடியாத ஒரு நகை.

  – இரா. கணபதி, சென்னை – 82.

- முகப்பொலிவை அதிகமாக்க, இறைவன் மனிதனுக்கு வழங்கிய அழகு சாதனம்.

  – என். பாலகிருஷ்ணன், ராம்பாக்கம்.

- இதய கேமராவின் இனிய ஃபிளாஷ்!

  – ஏ. அரசரத்தினம், திருப்பத்தூர்.

- உள்ளம் உற்பத்தி செய்யும் உன்னத ஊட்டச்சத்து.

  – எல். சண்முகசுந்தரி, இராமநாதபுரம்.

- இறைவன், மனிதனுக்கு மட்டுமே அளித்திருக்கும் ஆயுட்கால போனஸ்.

  – கோதை ராஜேந்திரன், சென்னை - 15.

- இதயப்பூ, தன் இதழ் விரிக்கும் சப்தம்.

  – ஜோதி, மதுரை – 20.

**மேற்கண்ட சொல்லோவியங்கள் தலா ரூ. 50/- பரிசு பெறுகின்றன.**

• ஜோடிகள் கூட்டம்

கடந்த நான்கரை ஆண்டு காலமாக ஜெயலலிதா பெயரில் கூறப்பட்ட ஊழல் குற்றச்சாட்டுக்கள், அவரது அதிகார துஷ்பிரயோகங்கள், வன்முறை அரசியலுக்கு வழித்தடம் போட்டது, ஆகியவற்றை இங்கே அடுக்கினால், இடம் போதாது. ஆனால் இவை எல்லாவற்றுக்கும் உச்சகட்டமாய், நடந்து முடிந்துள்ளது அ.தி.மு.க. மாநில மாநாடு. 'புரட்சி யுகத்தின் எழுச்சி மாநாடு' என்று திருநாமம் சூட்டப்பட்ட இந்த மாநாடு அதிகார துஷ்பிரயோகங்களில் ஒரு புரட்சியே நிகழ்த்தியுள்ளது என்று கூறலாம்.



• சசிகலா : புன்னகையுடன் மட்டும்

●● பரிதாபத்துக்குரியவர்கள் திருச்சி நகர மக்கள். ஆளும் கட்சியும், பிரதான எதிர்க் கட்சியான தி.மு.க.வும் தங்கள் பலத்தைக் காண்பிக்க திருச்சியைத் தேர்ந்தெடுத்ததால், பத்துப் பதினைந்து நாட்களுக்கு மேல் தினசரி வாழ்க்கை மிகவும் பாதித்து விட்டது. வெளி யூர்களிலிருந்து எந்த பஸ்ஸும் திருச்சிக்குள் வராத நிலையில், உள்ளூர் தனியார், டவுன் பஸ்களும், அ.தி.மு.க. மாநாட்டுக்கு ஆள் பிடிக் கப் போய் விட, நகரின் பல பகுதிகள் 'பந்த்' தோடியிருந்தன. இதற்கு மற்றொரு காரணம், பெரும்பாலான மக்கள் 'எதற்கு வம்பு' என்று வீட்டிலேயே அடைபட்டுக் கிடக்க விரும்பி யதுதான்.

●● அ.தி.மு.க. மாநாட்டையும், தி.மு.க. மாநாட்டையும் ஒப்பிட்டுப் பார்க்க வசதியாக இரண்டுமே மிக நெருக்கத்தில் நடந்து முடிந் திருக்கின்றன. தனியாருக்குப் பணம் கொடுத்து நிலத்தைப் பயன்படுத்தியது தி.மு.க. ஆனால் ஆளும்கட்சி, அரசு புறம்போக்கு நிலத்தை வளைத் துப் போட்டு மாநாடு நடத்தியது. மின்சார இலாகாவை நம்பாமல், பெரிய ஜெனரேட்டர்களை நம்பி மட்டுமே தி.மு.க. மாநாடு நடந்தது. ஆனால் அ.இ.அ.தி. மு.க.வோ, நேரடியாக உயர் அழுத்த மின்சார லைன்களிலிருந்து கரண்ட் எடுத்துக் கொண்டதை நாம் பார்த்தோம். (அதற்கு ஆகும் கட்டணத்தை நாங்கள் கட்டி விடுவோம் என்று நொண்டிச் சமாதானம் வரலாம்!) அ.தி.மு.க.

# பலவீனத்தை
# பகட்டு மா

மாநாடு குடியிருப்புப் பகுதியில் நடைபெற்றதால் பலருக்கு இடையூறு.

மாநாடு ஸ்தலத்திலிருந்து 500 அடி தொலைவிலுள்ள வீட்டுச் சொந்தக்காரர் ஒருவர் சொன்னார் :



• 5004 தாலிகளும் ஆசீர்வதிக்கும் அம்மாவும்



• 'டையனுக்கு' என்ன வயசு?

"சில நாட்கள் முன்பு அமைச்சர் கு.ப. கிருஷ்ணன், சில வீடுகளில் உள்ளவர்களை மாநாடு நடக்கும் போது பூட்டிக் கொண்டு வெளியேறிவிடும்படி சொன்னார். ஆனால் நாங்கள் ஒன்றுபட்டு ஒரே குரலில் உறுதியாக மறுத்து விடவே அவர்கள் வற்புறுத்தவில்லை."

●● திருச்சியிலுள்ள தமிழ்நாடு உபயோகிப்பாளர் பாதுகாப்புக் குழு, லயன்ஸ் கிளப் போன்றவை ஒன்றுசேர்ந்து அமைத்திருக்கும் 'நகரக் கண்காணிப்புக் குழு' மாநாடுகளுக்காகச் சாலைகளில் பள்ளம் தோண்டி, அலங்கார வளைவுகளை அமைக்கக் கூடாது என்று கோரிக்கை விடுத்திருந்தும் தி.மு.க., அ.தி.மு.க. ஆகிய இரண்டுமே கண்டு கொள்ளவில்லையாம். அ.தி.மு.க.வினர் ஒருபடி மேலே போய் நகரிலுள்ள அத்தனை விளம்பரப் பலகைகளிலும் மாநாடு பற்றியும் புரட்சித் தலைவி பற்றியும் புகழ்பாடி எழுதி விட்டார்கள். சம்பந்தப்பட்ட வாரிடமும் இதற்கு அனுமதி வாங்காமல் இப்படிச் செய்து விட்டதால் அவர்கள் நொந்து போய் விட்டார்கள்.

●● மாநாடு நடந்த இடம் கே.கே. நகர்தான். ஆனால் அதை கே. சாத்தனூர் என்று சொல்லிக் கொண்டார்கள். கே.கே. நகரிலிருந்த பெண்மணி ஒருவர் வயிற்றெரிச்சலுடன் சொன்னார் : "மாசத்துக்குப் பத்து லிட்டர் கெரசின் கொடுக்க வேண்டும். ஆனால் ஐந்து லிட்டர்தான் கொடுத்தார்கள். கேட்டால் 5. ரூபாய் கொடுங்கள், இன்னும் ஐந்து லிட்டர் தருகிறேன் என்று சொல்கிறான் ரேஷன் கடைக்காரன். இதை எங்கே சொல்லி முட்டிக் கொள்வது? இந்த அழகில் ஆட்சி இருக்க, மாநாடு ஒரு கேடா?"

●● மாநாட்டின் முதல் நிகழ்ச்சியாக 5004 (5+4=9) ஜோடி திருமணங்கள். கொஞ்சம் மெகா சைஸில் சிதம்பரம் ரீபீட் ஆனது. உபி.

# ளைக்குமா நாடு?



• கோட்டை முகப்பு •



• கண்காட்சியைப் பார்வையிடுகிறார்

சவுடன் வந்தார் முதல்வர்.

"மன்னர்கள் காலத்தில் கூட இதுபோன்ற அதிக எண்ணிக்கையில் ஒரே சமயத்தில் திருமணங்கள் நடந்ததில்லை. ஏனென்றால் அ.தி.மு.க. அப்போது இல்லையே" என்றார் முதல்வர். "இதில் முதல்வர் வருத்தப்பட என்ன இருக்கிறது? இப்போது நடப்பதும் மன்ன(ார்குடி)ர் ஆட்சிதானே!" என்று கிண்டலடித்தார் ஒரு குறும்புக்காரர்.

●● தமிழ்நாட்டிலுள்ள அத்தனை போக்குவரத்துக் கழகங்களின் பேருந்துகளையும் மாநாட்டுத் திடலில் பார்க்க முடிந்தது. மணமக்களை ஊரிலிருந்து கூட்டி வர அரசுப் பேருந்துகள் பயன்படுத்தப்பட்டதாம்.

●● திருமணம் முடிந்த பின்னர், மணமக்களுடன் அமர்ந்து விருந்து சாப்பிட்டார் முதல்வர். நிருபர்களுக்கும் அதிர்ஷ்டம் அடித்தது. முதல்வர் அருகில் சாப்பிட இடம் கிடைத்தது மட்டுமல்லாமல், மூன்று நான்கு கேள்விகளையும் கேட்க அனுமதித்தார் முதல்வர். ஹவாலா விவகாரத்தில் ஜெயலலிதா மீதும் குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது என்பதை சுத்தமாக மறந்து(?) விட்டு, பிரதமர் மீதும் அத்வானி மீதும் உள்ள குற்றச்சாட்டுக்களைப் பற்றி அவரது கருத்தைக் கேட்டார்கள் நிருபர்கள்! முதல்வரை அவ்வளவு நெருக்கத்தில் பார்த்ததில் அத்தனை நிருபர்களும் சற்றே மெய்மறந்து விட்டார்கள்! சென்னையில் 'தினகரன்' கைது சம்பந்தப்பட்ட செய்தி போலீஸார் மூலம் முன்னரே தெரிந்து விட்டதாலோ என்னவோ, 'நிரந்தர எதிரியும் கிடையாது; நண்பனும் கிடையாது' என்று சொன்னார் முதல்வர்.

●● முதல்வர் பக்கத்தில் உட்கார்ந்து சாப்பிட்ட ஜோடி மகாதேவன் - ராணி. புதுக்கோட்டை அன்னவாசலைச் சேர்ந்த ராணி, தனியார் சமூக சேவை மையத்தில் வேலை செய்பவர். நெருக்கத்தைப் பயன்படுத்திக் கொண்டு தமக்கு 'ஊக்கத் தொகை' கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளவே, முதல்வரும் பெயரைக் குறித்துக் கொண்டு போயிருக்கிறாராம்.

●● தென்னார்க்காடு வள்ளலார் மாவட்டத்தைச் சேர்ந்த ஒரு ஜோடியைச் சந்தித்த போது, 'கல்யாணமும் பண்ணி வைச்சு பத்தாயிரம் ரூபாய் மதிப்புள்ள சீர் வரிசையும் தர்றாங்க. வாங்கி வைச்சுக்கலாம். ஆனால் இதன் காரணமா



• கூட்டத்தில் ஒரு பகுதி

கவே நாங்கள் அம்மாவுக்கு வோட்டுப் போடணும் என்று அவசியமில்லை!" என்றனர். ஒரு ஜோடிக்கு சுமார் பதினைந்தாயிரம் ரூபாய் செலவு. அப்படிப் பார்த்தால் கிட்டத்தட்ட ஏழரை கோடி ரூபாய் செலவு செய்து 5004 திருமணங்கள் நடந்திருக்கின்றன.

●● மாநாட்டுக் கோலாகலத்துடன், எம்.ஜி.ஆர். மற்றும் பெரும்பிடுகு முத்தரையர் சிலைகளும் திறந்து வைக்கப்பட்டன. எம்.ஜி.ஆர். சிலை திறப்பின் போது கூட்டம் அதிகம் இல்லாது போகவே, முதல்வர் கடுப்பாகிப் போனார்.

●● கிட்டத்தட்ட தமிழக போலீஸார் முழுவதுமே திருச்சிக்கு வந்து விட்டார்களோ என்று தோன்றியது. வால்டர் தேவாரம் மீசையை முறுக்கிக் கொண்டு முதல்வரின் முன்னே குறுக்கும் நெடுக்குமாகப் போய்க் கொண்டிருந்தார். ("எங்கள் மாநாட்டில்

எண்ணி முப்பது போலீஸ்தான் பாதுகாப்புக்கு வந்திருந்தாங்க" என்று நம்மிடம் சொன்னார், தி.மு.க. மாநாட்டு ஏற்பாடுகளில் பங்கு கொண்ட கே.என். நேரு.

●● திருச்சியில் தனியார்கள் கூட கார்களை வெளியே எடுக்கத் தயக்கம் காட்டினார்கள். காரணம் போக்குவரத்து அதிகாரிகள் அவற்றை மடக்கி, மாநாட்டு வேலைக்கும், பாதுகாப்பு எஸ்கார்ட் வண்டியாகவும் பயன்படுத்த அனுப்பியதுதான்!

●● தி.மு.க. ஊர்வலத்தைத் தோற்கடிக்க வேண்டாமா! 'ஐம்பதாயிரம் மகளிர் அணியினர், சீருடை போட்டுக் கொண்டு ஊர்வலத்தில் பங்குகொள்வார்கள்' என்றார், இந்திரகுமாரி. ஆனால் அதில் ஐந்தில் ஒரு பகுதியினர் வந்தார்களா என்பதே கேள்விக்குறி.

●● மாநாட்டு ஊர்வலத்தை ஜெ. பார்வையிட்ட பிறகு கூட்டத்தினர் மீண்டும், சுற்றிக்

• கண்காட்சி அரங்கம்

கொண்டு ஊர்வலத்தில் சேர்ந்து கொள்ள வழியிருந்தது. வக்கீல்கள் அணியை தலைமை தாங்கிச் சென்ற அமைச்சர் பட்டாபிராமன், ஒரு மணி நேரத்துக்குப் பிறகு மீண்டும் ஊர்வலத்தில் இணைந்து பார்வை மேடை அருகே வந்து சேர்ந்தது இதனை உறுதிப்படுத்துவது போல் இருந்தது.

●● திராவிட வரலாற்றுக் கண்காட்சியில், கருணாநிதி ஜெயலலிதாவுக்குப் பரிசு கொடுப்பது போல ஒரு படம் இருந்தது. திராவிட இயக்க அமைச்சரவைகள் என்று 1967-ல் இருந்து அமைச்சரவைகளின் புகைப் படங்கள் வைக்கப்பட்டிருந்தன. 1971-ம் ஆண்டு அமைச்சரவையைக் காணவில்லை. காரணம் புரிகிறது. ஆனால் 1980ல் எம்.ஜி.ஆர். தலைமையில் அமைந்த அமைச்சரவையின் புகைப்படமும் காணவில்லையே!



• பஸ்கள் மாநாடு

●● தேர்தல் வரவிருக்கும் நிலையில் நடந்த மாநாடாகையால், செல்வாக்கைச் சேர்க்கும் முயற்சிகள் நிறையவே இருந்தன. கூடவே, ஊழல் குற்றச்சாட்டுக்களால் ஏற்பட்டிருக்கும் பலவீனங்களை மறைக்கும் முயற்சியும்! எம்.ஜி.ஆர். படங்களுக்கும், புகழ்பாடுவதற்கும், வழக்கத்திற்கு மாறாக கொஞ்சம் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. ஊர்வலத்தில் ஏகப்பட்ட கூட்டத்தை கூட்டிக் காண்பித்தால்தான் 'காங்கிரஸ் பயந்து கொண்டு தன் காலில் வந்து விழும்' என்ற நோக்கத்துடன் ஜெயலலிதா செயல்பட்டிருக்கிறார் என்பது நன்றாகவே புரிந்தது.

●● "அ.தி.மு.க. அரசு மீது உள்ள குற்றச்சாட்டுக்களை மக்கள் மனத்தில் இருந்து மறைக்கத்தானே இது போன்ற படாடோப மாநாட்டுக்கு ஏற்பாடு செய்திருக்கிறார் முதல்வர்?" என்று காமராஜ் மாவட்டத்தைச் சேர்ந்த கட்சிப் பொறுப்பாளர் ஒருவரைக் கேட்டபோது, "அது உண்மையிலேயே கவலைப்பட வேண்டிய விஷயம்தாங்க. தேர்தல் நேரத்தில் நாங்க நிறையவே சமாளிக்க வேண்டியிருக்கிறது" என்று ஒப்புக் கொண்டார்.

**- ப்ரியன்**

படங்கள் :
**கிருஷ்ணமூர்த்தி**



# குமுறல்

● எங்கள் குடும்பத்தினர் - குழந்தைகள் உட்பட - பத்து பேர் அண்மையில் கொடைக் கானல் சென்றோம். பாண்டியன் எக்ஸ்பிரஸில் பயணம் தொடங்கியதும் சுமார் பத்து பேர் - நல்ல பதவியில் உள்ளவர்கள் போன்ற இளைஞர்கள் ஒரே அரட்டைக் கச்சேரி நடத்தியது மட்டுமல்லாமல் மது அருந்துவது, சிகரெட் பிடிப்பது, ஆபாச ஜோக்குகள் சொல்வது என்று அந்த பெட்டியையே கலக்கிக் கொண்டிருந்தார்கள். இரவு 11.30 மணி வரை அவர்கள் அடித்த கூத்தும், நாங்கள் சிகரெட் புகை, மது நாற்றத்தினால் பட்ட அவஸ்தைகளும் சொல்லி மாளாது. பொது இடத்தில் இவ்வாறு மற்ற பயணிகளுக்கு இடைஞ்சலாக ஆட்டம் போடுவது எந்தவிதத்தில் சரி?

*பத்மாமணி, சென்னை - 18.*

● நான் யூனிட் ட்ரஸ்டில் கடந்த 92-ம் ஆண்டு எம்.இ.பி. 92 என்ற திட்டத்தின் கீழ் ரூ 10 முகமதிப்புள்ள ஆயிரம் பங்குகள் வாங்கி, ரூபாய் பத்தாயிரம் முதலீடு செய்தேன். இத்திட்டத்தின்படி மூன்று ஆண்டுகளுக்கு அவற்றை விற்று பணமாக்கிக் கொள்ள முடியாது. எனவே மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு கடந்த நவம்பர் மாதம் அவற்றைப் பணமாக்கிக் கொள்ள அனுப்பிய பொழுது முகமதிப்பான பங்கு 12.70 வீதம் எடுத்துக் கொள்ளப் பட்டு எனக்கு ரூ. 12,700 கணக்கிடப்பட்டது. ஆகவே எனக்கு மூன்று ஆண்டுகளுக்கு உபரியாகக் கிடைத்த தொகை ரூபாய் பத்தாயிரத்துக்கு ரூ 2700 மட்டுமே. இந்த குறைந்தபட்ச இலாபத் தொகையிலும் ரூ 2000/- வருமான வரியாகப் பிடிக்கப்பட்டு ரூ 10,700 (பத்தாயிரத்து எழுநூறு) மட்டுமே எனக்கு செக் மூலம் அனுப்பி வைக்கப்பட்டதைக் கண்டு நான் பெரிதும் அதிர்ச்சி அடைந்தேன். ஒரு 'மாபெரும்' அரசு சார்பு நிறுவனம் மூலம் பெற்ற உபரித் தொகை ரூ.2700க்கு, ரூ. 2000 வரி என்பது என்ன நியாயமோ தெரியவில்லை.

*- இரா. குப்பு சொர்ணாம்பிகை, சேலம் - 1.*

● நான் மதுரை மாவட்ட வேலை வாய்ப்பு அலுவலகத்தில் 8.7.1975 ம் ஆண்டு முதல் பதிந்து, தொடர்ந்து புதுப்பித்தும் வருகிறேன். சென்ற வருடம், 20.2.95 அன்று தமிழ்நாடு மின்சார வாரியத்தில் மதிப்பீட்டாளர் பதவிக்கு நேர்காணலை நல்ல முறையில் சந்தித்தேன். ஆனால் ஒரு வருடமாகப் போகும் நிலையில், அதனுடைய முடிவை இன்னும் என்னைப் போன்றோர் அறிய முடியவில்லை.

நான், நாற்பது வயதைக் கடந்த, பின்தங்கிய வகுப்பைச் சேர்ந்த பி.ஏ. பட்டதாரி. இன்னும் எத்தனை காலம் காத்திருப்பது?

*- ம. மாரிமுத்து, மதுரை - 3.*

● என் பிறந்த நாளன்று அர்ச்சனை செய்ய கோவிலுக்குப் போனேன். தீபாராதனை காட்டியதும் தட்டில் ஐந்து ரூபாய் நாணயத்தைப் போட்டேன். ஆனால் அர்ச்சகரோ, கோபம் கொண்டு எனக்கும் அர்ச்சனை செய்ய ஆரம்பித்தார்!

"ஏம்பா... பார்த்தா டீசண்டாயிருக்கியே... தட்டில கேவலம் எட்டணா காசைப் போடறியே.. இது உனக்கே நல்லாயிருக்கா? நான் ரெண்டு ரூபாக்கு குறைஞ்சு வாங்கறதில்லை...!" என்றார். அவமானத்தால் குன்றிய நான் 'அது அஞ்சு ரூபா காசுங்க...' என்று கூற, காசைக் கூர்ந்து பார்த்தபின் அவர் 'சாரி தம்பி.. எட்டணா மாதிரியேயிருக்கிறதால தப்பா சொல்லிட்டேன்' என்று வருந்தினார்.

எல்லா இடங்களிலும் இந்த ஐந்து ரூபாய் நாணயத்தால் குழப்பம், தகராறு. வேறு அளவில், வடிவமைப்பில் நாணயங்களை வித்தியாசமாகச் செய்யக் கூடாதா?

*- ஆர். ரகோத்தம், சென்னை - 33.*

● நாகர்கோவில் வடசேரி பேருந்து நிலையத்தில் அமைந்திருக்கும் கழிப்பிடத்தில் சிறுநீர் கழிக்க ஆண்களுக்கு 25 பைசாவும், பெண்களுக்கு 50 பைசாவும் வசூலிக்கிறார்கள். ஏன் இந்த வேறுபாடு?

*- எஸ். முகம்மது யூசுப், திருநெல்வேலி.*

● சில நாட்களுக்கு முன் ஸ்ரீரங்கம் காந்திஜி ரோடில் சென்று கொண்டிருந்தேன். அப்போது திருச்சி மாநகராட்சி ஸ்ரீரங்கம் கோட்டத்தைச் சேர்ந்த குப்பை லாரி அந்த வழியே சென்று கொண்டிருந்தது. அதில் வழிந்து கொண்டிருந்த குப்பைகள் காற்றில் காந்திஜி ரோட்டில் பறந்து சிதற ஆரம்பித்தன. என் மீதும் விழுந்தது. நான் நீண்ட கால தொண்டைப் புண் நோயாளி. டஸ்ட் அலர்ஜி வேறு. அவஸ்தைப்பட்டேன். அதைவிடவும் துயரம் அளித்தது, அலுவலகம் சென்று குப்பை லாரி டிரைவரிடம் கேட்ட போது அவர் படு அலட்சியமாக பதில் கூறியதுதான். குப்பை மீது டார்பாலின் போட்டு மூடிச் செல்ல வேண்டாமா?

*- ரா. ராகவன், ஸ்ரீரங்கம்.*

சட்டம் ஒரு கூர்மையான, அழகான ஆயுதம். பயன் படுத்துபவரின் சாமர்த்தியத்தில்தான் அதன் பலன் இருக்கிறது.

சென்ற வாரம் நான் குறிப்பிட்டிருந்த அந்த 'துனி காவல் நிலையக் கொலை வழக்கை', வைத்துக் கொண்டு, நீதிபதிகள் தான் சட்டத்தை அதன் 'விரைப்பு'த் தன்மை மாறாமல் பிர யோகிக்கிறார்கள் என்று கருதி விடக்கூடாது.



# விஞ்ஞானிக்கு நேர்ந்த அவமானம்!

சி.வி. நரசிம்மன்

ஒரு கதை சொல்கிறேன். நடந்த கதை. நம்புவது கொஞ்சம் கஷ்டம்தான். ஆனால் எமர்ஜென்ஸி காலத்தில் நடந்த எத் தனையோ நம்ப முடியாத - ஆனால் உண்மையான விஷயங் களில் இதுவும் ஒன்று.

உலகப் புகழ் பெற்ற ஒரு விஞ்ஞானி. பிரிட்டிஷ்காரர். ஒரு ஆய்வரங்கத்தில் பங்குபெற ஆஸ்திரேலியா வுக்குப் போயிருந்தார் அவர். முடித்துவிட்டுத் திரும்புகையில் கராச்சியில் மற்றொரு கான் ஃபரன்ஸ் அவருக்கு.

ஆஸ்திரேலியாவிலிருந்து கிளம்பிய அந்த விமானம் கல்கத்தாவில் இறங்கி, மறுபடி கிளம்பி, தில்லியில் இறங்கி, அங்கிருந்து கிளம்பி கராச்சி போவது ரூட்.

அந்த வகையில் கல்கத்தா வில் விமானம் இறங்கி, சற்று நேரம் நின்றது. கைப் பையை எடுத்துக் கொண்டு இறங்கி னார் அந்த விஞ் ஞானி.

விமான நிலையத்தைச் சுற்றி வருகை யில், அங்கிருந்த ஒரு மாநில அரசு நிறுவிய கலைப் பொருள் அங்காடியில் அவர் கவனம் நிற்க, உள்ளே சென்று பார்வையிட்டார்.

பல அழகிய, பாரம்பரிய கலைப் பொருள்களுக்கிடையே ஒரு 'பேப்பர்-கட்டர்' அவர் கவனத்தை வெகுவாக ஈர்த்தது.

ஒரு வாளின் உருவத்தில், அழகான வேலைப்பாடுகள் அமைந்த பிடியுடன் நீளமாக, கூர்மையாக, பளபளப்பாக இருந்த அந்த வெண்கல பேப்பர் கட்டர் அவருக்கு மிகவும் பிடித்துப் போய்விட, 'தன் மகனுக்குப் பரிசாகத் தரலாம்' என்று நினைத்து, வாங்கி விட்டார். பணம் கொடுத்து, பில்லும் பெற் றாகி விட்டது.

கொண்டு வந்திருந்த கைப் பையிலேயே அதைப் போட்டுக் கொண்டு விமானம் ஏறி உட்கார்ந்து விட்டார்.

கிளம்பிய விமானத்தின் அடுத்த 'ஹால்ட்', புது தில்லி. இந்தியாவின் தலைநகர். இறங்கிப் பார்க்க ஆவல் எழத் தானே செய்யும்?

இறங்கிவிட்டார் அந்த விஞ் ஞானி. கையில் அதே கைப்பை. அது எமர்ஜென்ஸி தொடங்கிய கால கட்டம். புது தில்லி விமான நிலையத்தில் வழக்கத்தை விட அதிகமான செக்யூரிட்டி அப்போது.

இறங்கி, விமான நிலையத் தைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பிய விஞ்ஞானியைத் தடுத்தார், காவ லுக்கு இருந்த ஒரு போலீஸ்காரர்.

"உள்ளே நுழைவதென்றால், உங்கள் பையை சோதனை



"முதல்வர் கிட்டே வேலை கேட்டுப் போனியே என்ன சொன்னார்?"
"வேலை காலி இல்லை, கல்யாணம் வேணும்ன்னா பண்ணி வைக்கிறேன், திருச்சிக்கு வா என்றார்."

— தஞ்சாவூர் ராஜபாரதி

---

போட்டபின்பே அனுமதிப் பேன்" என்றார்.

"அதனாலென்ன! சோதனை போட்டுக் கொள்ளுங்கள்!" என்று பையைக் கொடுத்தார் விஞ்ஞானி.

திறந்து, துழாவிப் பார்த்த அந்த போலீஸ்காரரின் கையில் அந்த 'பேப்பர் கட்டர்' அகப் பட்டது.

பளபளப்பாக, கூர்மையாக, பிடியுடன் கூடிய, அசப்பில் ஒரு வாள் போன்ற தோற்றம் அளித்த பேப்பர் கட்டர்.

"சற்று என்னுடன் வாருங்கள்!"

தனியாகக் கூட்டிப் போகப்பட்ட விஞ்ஞானிக்கு, அந்த போலீஸ்காரர் சொன்ன தகவல் அதிர்ச்சியாக இருந்தது.

"நீங்கள் ஓர் ஆயுதத்தை வைத்திருக்கிறீர்கள். எங்கள் நாட்டு சட்டப்படி லைசென்ஸ் இல்லாமல் ஆயுதம் வைத்திருப்பது கிரிமினல் குற்றம். உங்களை இத்துடன் செல்ல அனுமதிக்க முடியாது!"

விஞ்ஞானி குழப்பமடைந்தார்.

"பாருங்கள். இது ஒரு பேப்பர் கட்டர். உங்கள் நாட்டு கல்கத்தா விமான நிலையத்தில், உங்கள் அரசு திருவியுள்ள கடையில் வாங்கியது. இதோ பில் கூட இருக்கிறது."

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. சாதாரணமாக ஒன்பது இன்ச்சுக்கு மேல் நீளமும், இரண்டு இன்ச்சுக்கு மேல் அகலமும் கொண்டு வாள் உருவத்தில் இருக்கும் எந்த கூர்மையான பொருளும் Indian Arms Act படி ஒரு ஆயுதம் என்று கருதப்படும். அதை வைத்திருப்பதற்கு லைசென்ஸ் தேவை. இந்த வாளின் நீளம் கிட்டத்தட்ட பத்து இன்ச். இதற்கு உங்களிடம் லைசென்ஸ் இல்லாததால் உங்களை நான் விட முடியாது!"

அவர் பார்த்தார். இது ஏதடா வம்பு என்று, "சரி, இதை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்; ஆளை விடுங்கள். விமானம் கிளம்ப நேரமாகி விட்டது!" என்றார்.

ஆனால் அந்த போலீஸ்காரர் அவரை விடுவதாக இல்லை.

"நீங்கள் என்னுடன் போலீஸ் ஸ்டேஷன் வந்தே ஆக வேண்டும்" என்று சொல்லி, இழுத்துப் போய்விட்டார்.

தில்லி காவல் நிலையத்தில், அவர் வைத்திருந்தது ஆயுதம்தான் என்று சொல்லி, அவரைக் கைது செய்து விட்டார்கள்! அதோடு மட்டுமின்றி, குற்றவாளிகளிடம் வழக்கமாகச் செய்வது போல, அவரது கைரேகைகளைப் பதிவு செய்து கொண்டு, அவர் உடைமைகளைப் பறித்துக் கொண்டு, கேஸ் ஃபைல் பண்ணி, அவரை லாக்-அப்பிலும் வைத்து விட்டார்கள்!

மறுநாள் கராச்சியில் சொற்பொழிவாற்ற வேண்டிய விஞ்ஞானி!

அவரது நிகழ்ச்சிகளெல்லாம் கான்ஸல் ஆனது!

மறுநாள் கோர்ட்டுக்குக் கொண்டு செல்லப்பட்டார்.

'ஆயுதம் வைத்திருந்த குற்ற'த்துக்காக, ஒரு நாள் சிறை தண்டனையும் அபராதமும் விதிக்கப்பட்டார்!

அபராதம் செலுத்திவிட்டு, விட்டால் போதும் என்று அடுத்த ஃபிளைட்டில் ஏறி போய் விட்டார்!

போய்ச் சேர்ந்தவர் செய்த முதல் காரியம், பிரதமர் இந்திராவுக்குக் காட்டமாக ஒரு கடிதம் எழுதினார்.

"இப்படி ஒரு மோசமான, கேவலமான காவல்துறைச் சட்டங்களை நான் எங்கும் பார்த்ததில்லை. மரியாதை தெரியாமல், கண்ணியமில்லாமல் ஒரு வெளிநாட்டவரை இப்படி நடத்துவதுதான் உங்கள் நாகரிகமா? இனி செத்தாலும் இந்தியாவில் காலடி வைக்க மாட்டேன்" என்ற ரீதியில் காட்டமாகத் திட்டி, முழு விவரமும் எழுதியிருந்தார்.

அப்போது நான் மத்திய உள்துறையின் இணைச் செயலராக இருந்தேன். பிரதம மந்திரியின் காரியாலயத்திலிருந்து அந்தக் கடிதம் என்னுடைய கவனத்திற்கு அனுப்பப்பட்டது.

படித்துப் பார்த்து, ஒருவாறு நடந்திருக்கக் கூடியதை யூகித்துக் கொண்டு, தில்லி ஐ.ஜி.யைத் தொடர்பு கொண்டேன், தொலைபேசியில்.

விவரம் சொல்லி, "என்ன நடந்தது என்கிற விவரம் இன்னும் இருபத்தி நான்கு மணி நேரத்துக்குள் எனக்கு வந்தாக வேண்டும்" என்று தெரிவித்தேன்.

மறுநாள் தில்லி டி.ஐ.ஜி. என்னிடம் வந்து, நடந்ததைச் சொன்னார்.

"சட்டப்படி ஒன்பது இன்ச்சுக்கு மேல் நீளம் உள்ள அது ஒரு ஆயுதம். அதை வைத்திருப்பது கிரிமினல் குற்றம். ஆகவே கைது செய்து, நடவடிக்கை எடுக்கப்பட்டது" என்று சாதாரணமாகச் சொன்னார்.

எனக்குக் கடும் கோபம் வந்தது. ஓர் உலகப்

## 'சுருக் நறுக்' என்றொரு சொல்லோவியம் - 19

# புரட்சி என்பது....

இன்று விவஸ்தையே இல்லாமல் எது எதற்கோ உபயோகமாகும் ஒரு சக்தி மிக்க சொல், 'புரட்சி'.

உங்கள் கற்பனையில் 'புரட்சி'க்கு ஒரு விளக்கம் தீட்டுங்கள். பிரசுரமாகும் ஒவ்வொரு சொல்லோவியத்துக்கும் ரூ. 50/- பரிசு. இன்னும் ஏழு வாரங்கள்தான் இந்தப் போட்டி தொடரப் போகிறது. அதிக முறை பரிசு வென்று, மெகா பரிசையும் தட்டிச் செல்லப் போகிற அதிர்ஷ்டசாலி உங்களில் யார்?

முடிவு தேதி : 26.2.96

ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

— ஆர்.

புரட்சி என்பது ..............................................

..............................................................

..............................................................

..............................................................

..............................................................

பெயர் : ..................................................

முகவரி : ................................................

..............................................................

..............................................................

..............................................................

பிரசித்தி பெற்ற விஞ்ஞானியை இப்படியா அவமதிப்பது? சட்டத்தின் உட்பிரிவுகளை இவ்வாறு விபரீதமாக அர்த்தம் பண்ணிக் கொண்டு, கிரிமினல் நோக்கம் ஒன்றுமே இல்லாதிருந்த ஒரு சாதுவான விஞ்ஞானியை கீழ்நிலை போலீஸார் அவமானப்படுத்தியது மட்டுமல்லாமல், அந்த போலீஸாருக்குத் துணையாக மேல் நிலை போலீஸ் ஆபீசர்களும் இதை மிகச் சாதாரணமாக எடுத்துக் கொண்டது எனக்கு அதிர்ச்சியாக இருந்தது.

நான் அவருக்கு இப்படி உத்தரவிட்டேன்:

''நீங்கள் உடனே மேல் கோர்ட்டுக்கு விண்ணப்பித்து அவரிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்ட அந்த பேப்பர்-கட்டரை கோர்ட்டிலிருந்து மீட்டு வரவேண்டும். இரண்டாவது, காவல் நிலையத்தில் பதிவு செய்யப் பட்டிருக்கும் அவரது கை ரேகைகள் உடனடியாக அழிக்கப்பட வேண்டும்!''

இரண்டும் உடனடியாக நிறைவேற்றப் பட்டன!

நடந்தது, மிகப் பெரிய தவறு. உடனடியாக மன்னிப்பு கேட்பது தவிர வேறு வழியில்லை என்று எனக்குத் தோன்றியது.

அப்படியே ஒரு மன்னிப்புக் கடிதம் - அரசு சார்பாக எழுதி, பிரதமருக்கு' அனுப்பினேன், ஒப்புதலுக்கு.

ஆச்சர்யம் - நான் எழுதியதை இந்திரா அப்படியே ஏற்றுக் கொண்டு, கையெழுத்திட்டு அனுப்பினார்.

''எங்கள் நாட்டில் உங்களுக்கு நேர்ந்த அவமானத்துக்காக மன்னிப்பு கோருகிறோம். இது ஒரு அசாதாரணமான விபரீத நிகழ்வு. இதனால், நீங்கள் இந்தியாவுக்கு வரப் போவதில்லை என்று எடுத்திருக்கும் முடிவை தயவு செய்து மாற்றிக் கொள்ளுங்கள். உங்களை வரவேற்க எப்போதும் காத்திருக்கிறோம்!'' என்று எழுதி பிரதமர் ஒப்புதலுடன் அந்த பேப்பர்-கட்டரையும் இணைத்து, லண்டனிலுள்ள இந்திய தூதருக்கு உடனே அனுப்பி, அவரை நேரில் சென்று கொடுத்து மன்னிப்பு கோரக் கேட்டுக் கொண்டேன்.

அந்த விஞ்ஞானி அப்புறம் என்ன முடிவு செய்தார், எப்படி ரியாக்ட் செய்தார் என்பதெல்லாம் தெரியவில்லை. அவர் மறுபடி இந்தியாவுக்கு வந்ததாகவும் தெரியவில்லை.

எதற்குச் சொல்கிறேன் என்றால், சட்டங்களை அமல் செய்வதில் கண்மூடித்தனமாகச் செயல்பட்டு, கண்ணியமானவர்களையும் சட்டத்தை மதிக்கும் மனப்பான்மை கொண்ட சாது மனிதர்களையும் இம்சிக்கும் போலீஸாரை உடனுக்குடனே கண்டித்து திருத்த வேண்டியது மேலதிகாரிகளின் பொறுப்பு. இது மிகவும் அவசியம். அவசரமும் கூட!

(அடுத்த வாரம்)

# "தேவை பெருகிடுச்சு... அதான், அ.தி.மு.க.வுல சேர்ந்துட்டேன்!"

"வேறு எந்த நேர்மையான வேலைக்கும் லாயக்கில்லாதவர்கள் இன்று அரசியலுக்கு வந்து விட்டார்கள்!"

"முதலமைச்சர்களுக்குத் தம் 'ஸ்டேட்'டெல்லாம் சொந்த 'எஸ்டேட்'டாகத் தெரிகின்றன!"

PUCL - People's Union for Civil Liberties அமைப்பு நடத்திய கூட்டத்தில் மேற்படி அனல்மொழிகள் வெளிப்பட்டன. 'நியாயமான தேர்தலுக்கான குடியுரிமை இயக்கம்' என்ற தலைப்பிலான கருத்தரங்கம் அது.

• இ.பா.



"நடிக நடிகையர் என்றால், எழுதித் தருகிற வசனங்களை, டைரக்டர் சொல்கிறபடி பேசி, நடிக்கிற பொம்மைகள் என்று கருதாமல், அவர்களுக்கும் சுயமாய் சிந்திக்கத் தெரியும் என்று அங்கீகரித்து, இந்த நிகழ்ச்சிக்கு என்னைக் கூப்பிட்டதற்கு நன்றி" என்று அதிரடியாக ஆரம்பித்தார் ரேவதி.

"இன்றைய அரசியல்வாதிகள், இருபத்து நாலு மணி நேரமும் கேமரா முன்பு நடிக்கிற எங்களை விடச் சிறப்பாக மக்கள் முன்பு நடிக்கிறார்கள்!" என்று அவர் ஒரு குட்டு வைத்தபோது கூட்டம் கலகலத்தது.

• நாசர்



நிகழ்ச்சியில் பேசியிருக்க வேண்டிய இன்னொரு சினிமா பிரபலம் நாசர். திருவனந்தபுரத்திலிருந்து அவர் வர முடியாது போய் விட்டது. தாம் பேச விரும்பியதை ஃபாக்ஸில் அனுப்ப, தம் கணவர் கருத்துக்களுக்குக் குரல் கொடுத்தார், நாசரின் திருமதி.

இந்திரா பார்த்தசாரதி, " 'ஒருவர் கிரிமினல், சமூக, பொருளாதாரக் குற்றம் இழைத்ததற்கான ஆதாரம் இருந்தால் அவரைத் தேர்தலில் நிறுத்தாதீர்கள்' என்று மக்கள் சிவில் உரிமைக் கழகத்தினர் அரசியல் கட்சிகளுக்கு வேண்டுகோள் விடுத்திருக்கிறார்களே! அப்புறம் அரசியல் கட்சிகள் யாரைத்தான் தேர்தலில் நிறுத்துவது?" என்று குத்திக்காட்டியதோடு நிற்காமல், இன்னொரு சுவாரஸ்யமான சம்பவம் சொன்னார் :

• ரேவதி

"என்னோடு கல்லூரியில் படித்தவர் ஒருவர். பின்னர் அரசியலுக்கு வந்து, பல கட்சிகளையும் பார்த்து விட்டார். சமீபத்தில் எதேச்சையாய் சந்தித்த போது, 'இப்போது எந்த கட்சி?' என்றேன். 'பசங்கள் எல்லாம் பெரிசா யிடுச்சி! தேவை பெருகிடுச்சு! அதனால அ.தி.மு.க.வுல இருக்கேன்' என்றார்!"

கைத்தட்டல் எப்படி ஒலித்திருக்கும் என்று யூகித்துக் கொள்ளுங்கள்!

- எஸ். சந்திரமௌலி

# "விடாதே,

**வெளியே :**

இந்த வாரம் எம்.எல்.ஏ. ஹாஸ்டல். காம்பவுண்ட் கேட்டுக்கருகில் சிகரெட், வேர்க் கடலை, பட்டாணி விற்பவர் ஒருவர் இருக் கிறார். மழையோ, வெயிலோ, கூட்டமோ, இல் லையோ, இந்த வேர்க்கடலைக்காரரை இங்கு எப்போதும் பார்க்கலாம். "யாருப்பா அது சைக்கிளை ரோட்டுக்கு நடுவுலே நிறுத்தறது? இது மாதிரித் தான் போன வாரம் ஒருத்தன் நிறுத்தினான். மிலிட்டரி தோரணையில் ஒருத்தன் வந்து அடிச்சிட்டுப் போயிட்டான். அவனை என்ன செய்ய முடியும்?" என்று வே. கடலைக்காரர் குரல் கொடுக்கிறார்.

கையில் துணிப்பையுடன் ஒருவர் வந்தார். "ஐயாவோட ரூம் எந்த மாடில இருக்கு?"

"அந்தாளை இங்கே ஏன்யா தேடறே...? போய் வடபழனிக்குப் பக்கத்துல பாரு. அங்கேதான் அவருக்கு வாசம்!" என்று சொல்கிறார் கடலை வண்டிக்குப் பக்கத்தில் பான் போட்டுக் கொண்டிருந்த காக்கிச் சட்டைக்காரர். (வாட்ச்மேன்?)

காம்பவுண்டுக்கு உள்ளே குறுக்கும் நெடுக்குமாக ஆட்டோக்கள் நிற்கின்றன.

"டேய் சோமு, அந்த கெராக்கி வந்துதாடா?"

மேலே ஐந்தாவது மாடியைப் பார்த்த சோமு, "ஆள் கிளம்பலை. ரூம்ல லைட் எரியுது பார்" என்று பதில் சொன்னார்.

அடுத்த ஒரு சில நிமிடங்களில் வயதான ஒருவர், (எம்.எல்.ஏ. அல்ல) டக், டக்கென்று வந்து சோமுவின் ஆட்டோவில் அமர்ந்தார்.

ஆட்டோ கிளம்பியதும் மற்றவர்கள் அடித்த கமெண்ட்: "இந்த வயகல மனுஷனுக்கு ஷோக்கைப் பார்த்தியா?"

ஹாஸ்டலுக்குள் போவதற்காக மெயின் வாசலில் நுழைந்த போது வெளியில் நின்று கொண்டிருந்த இருவர் பேசிக் கொண்டார்கள்....

"இன்னப்பா அநியாயம்... மனுஷன் பொங்கலுக்கு கூட எதுவுமே கவனிக்கல?"

"ஏண்டா அந்தாளுக்கு செய்யறே...? ராத்திரில பன்னெண்டு மணிக்கு லொங்கு லொங்குன்னு ஓடி புகாரியில் வறுத்த கறி, பரோட்டா வாங்கி வர்றயே! உனக்கு இதுவும் வேணும், இன்னமும் வேணும்!"

**உள்ளே :**

ரிசப்ஷனுக்கு வலது பக்கம் ஒரு பொதுத் தொலைபேசி. கறை வேட்டி ஒருவர் பேசிக் கொண்டிருந்தார்.

"தலைமைக் கழகமா... நம்ப எம்.எல்.ஏ. வந்தாருங்களா?"

"....."


• எம்.எல்.ஏ. ஹாஸ்டல்

"ஆமாம்... ஸாக்ஸ் 600 செட் கொடுத் தனுப்பிடுங்க..."

கொஞ்சம் உன்னிப் பாகக் கேட்டதில், திருச்சி மாநாட்டில் தொண்டர் கள் போட்டுக் கொண்டு அணிவகுக்க வெள்ளை யூனிஃபார்ம், ஷூ, ஸாக்ஸ், தலைமைக் கழகத்திலிருந்து தரு கிறார்கள் என்பது புரிந்தது.

நம்மைக் கவ னித்த கறை வேட்டி, "உங்களுக்கு என்ன வேணும் ஸார்?" என்றார்.

# பிடி! விடாதே, பிடி!"

"போன்" என்று நாம் ஒரு ரூபாய் நாணயத்தைப் பாக்கெட்டில் தேட, "அதெல்லாம் வேண்டாம் ஸார். நான் தர்றேன்."

நம்மேல் அவருக்கென்ன அவ்வளவு அக்கறை என்று யோசித்தபடியே டயல் செய்தோம். நாணயத்தை அவர் போட்டார். நமக்கு லைன் கிடைத்தது. அவருக்கும் போட்ட நாணயம் திரும்பக் கிடைத்துவிட்டது.



• டெலிபோன் : போட்ட காசு வந்துவிடும்.

ஆமாம், போடுகிற நாணயம் கீழே விழுந்து விடுகிற மாதிரி டெலிபோனிலுள்ள காயின் பாக்ஸை உடைத்து வைத்திருக்கிறார்கள்!

"சும்மா பண்ணுங்க" என்றார்.

அப்படியே முதல் மாடிக்குச் சென்றோம். சட்ட மன்றம் நடக்காததால் வராந்தாக்கள் வெறிச்சோடிக் கிடந்தன. மூன்று நான்கு அறைகளில் லைட் எரிந்து கொண்டு இருந்தது. இடது கோடியில் கடைசி அறையை ஒட்டிய மாதிரி இருவர் பேசிக் கொண்டிருந்தனர்.

"வரப் போற எலக்ஷன்லயும் நம்ம எம்.எல்.ஏ. கண்டிப்பா 'வின்' பண்ணிடுவாரு...."

"எப்படிச் சொல்றே?"

"அவருதான் கையில டிக்-20யை வைச்சுக்கிட்டு எனக்கு வோட்டு போடலைன்னா இதைக் குடிச்சிட்டுச் செத்துப் போயிடுவேன்னு மக்களை மிரட்டிக்கிட்டு இருக்காரே!"

"ஓஹோ... நீ அப்படி வர்றியா?"

இப்படிக் கூட வோட்டுக் கேட்கும் முறை இருக்கிறதா என்று நாம் வியந்து கொண்டே இரண்டாவது மாடிக்குச் சென்றோம். வலது பக்கத்தில் ஓர் அறை.

"என்னது! வாரிக்காரரு டாக்டரை அடிச்சுட்டாரா?"

"....."

"எஃப்.ஐ.ஆர். போட்டுட்டாங்களா?"

"....."

"சரி... சரி... ஒண்ணும் கவலைப்படவேணாம். காலைல வந்துடறேன்... இன்ஸ்பெக்டர்கிட்ட சொல்லு...."

போனை டக்கென்று வைத்துவிட்டு வெளியே வந்தார் அந்தப் பெண் எம்.எல்.ஏ!

ஆறாவது மாடிக்குச் சென்றோம். தெரிந்த முகம்! (ஜெ) காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினராயிருக்கும் சிங்காரமானவர்தான் அவர்!

"பிரபு போன வாரம் பி.எம்மைப் பார்த்தார். முடிவு பண்ணிட்டாங்க. அம்மாவோடதான் கூட்டு. வாழப்பாடி 'கிழப்பாடி' ஆனது போல 'குமரி' கிழவி ஆகப் போறார், பார்த்துக்குங்க!"

சொல்லிவிட்டு கதவைப் பூட்டி விட்டு பெட்டி படுக்கையுடன் புறப்பட்டுச் சென்றார்.

நான்காவது மாடிக்குச் சென்றபோது, "விடாதே பிடி...." என்று ஒரு ரூமிலிருந்து குரல் வரவே... என்னவோ ஏதோ என்று பயந்தபடி நாமும் ஓடப் பார்க்க, நமக்கு முன்னால் பெருச்சாளி ஒன்று ஓடி மறைந்தது!

— தில்லப்பா

படங்கள் : கிருஷ்ணமூர்த்தி

# ஜெயின் ஏன் டயரி எழுதினார்?

● டி.வி.எஸ். பாலு, சித்தமல்லி.

? வரப் போகிற தேர்தலில் தி.மு.க.தான் ஆட்சியைப் பிடிக்கும் என்று யாகவா முனிவர் கூறியுள்ளாரே?

! கிறித்துவக் கல்லூரி மாணவர்கள் நடத்திய கருத்துக் கணிப்பில் அ.தி.மு.க., தி.மு.க.வைக் காட்டிலும் 0.3 சதவிகித ஆதரவைத்தான் கூடுதலாகப் பெற்றுள்ளது. மிருகபல மெஜாரிட்டியுடன் ஆட்சிக்கு வந்த கட்சிக்கு இது பெரிய பின்னடைவு. எனவே யாகவா முனிவரின் ஆருடம் பலித்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

● என். சண்முகம், திருவண்ணாமலை.

? 'போராட்டம் நடத்த கூட்டணி; வோட்டு வாங்குவதற்குக் கூட்டணி; ஆட்சி அமைக்க மட்டும் ஒரு கட்சி என்றால், அது என்ன ஜனநாயகம்?' என்று டாக்டர் ராம்தாஸ் கேட்பது பற்றி...?

! கூட்டணி எந்த அடிப்படையில் அமைகிறது என்று கவனிக்க வேண்டும். ஒரு கட்சி, பெரும்பான்மை பலத்துடன் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகும் கூட்டணி ஆட்சியே அமைய வேண்டும் என்று வாதாடுவது விதண்டாவாதம்.

● எஸ். அருள்மொழி, காட்டூர்.

? மாநிலங்கள் அவையின் அடிப்படை நோக்கம், பல்வேறு துறைகளின் அனுபவஸ்தர்களுக்குப் பிரதிநிதித்துவம் கொடுப்பது தானே? அந்த வகையில் 'கிரைம்' துறையில் அனுபவசாலியான ஆதிராஜாராமைத் தேர்ந்தெடுத்ததில் தவறு என்ன?

! அதானே! புரட்சித் தலைவியின் நல்லெண்ணம் உங்களுக்குப் புரிகிற மாதிரி மற்றவர்களுக்குப் புரியவில்லையே...!

● அ.க. கிருஷ்ணன்,
சென்னை - 39.

? தேர்தல் நேரத்துத் தொல்லையாகத் தாங்கள் எதைக் கருதுகிறீர்கள்?

! வேறென்ன? லவுட் ஸ்பீக்கர், சுவரோவியங்கள் ஆகியவைதான்!

● புளியரை கணேசன்,
சென்னை - 36.

? 'தமிழகத்தில் நடக்கும் ஜல்லிக்கட்டு கூட பிராணிகளுக்கு வதை தரும் செயல்தான். அதைத் தடுக்க வேண்டும்' என்று மேனகா காந்தி பேசியிருக்கிறாரே?

! பிராணிகளுக்கு மட்டுமா? முட்டு வாங்கி, அலறி விழும் அப்பாவிகளை டீ.வி.யில் பார்க்கும் போது வயிறு பகிரென்கிறது. அவசியம் தடைசெய்யப்பட வேண்டியதுதான்.

● ஐ. சாந்து உஸ்மானி, திருமங்கலக்குடி.

? இன்றைய ஜனநாயகத்தில் நிலையானது எது? நிலையற்றது எது?

! நிலையானது - ஊழல். நிலையற்றது - கூட்டணி.

● க.சு.வே. சித்திரவேலு, கருப்பம்புலம்.

? பெண் போலீஸ் தேர்வில் பெரும்பாலும் கிராமப் பெண்கள்தானாமே...?

! கடுமையான உடலுழைப்புக்குக் கிராமப் பெண்கள் பழக்கப்பட்டிருக்கிறார்கள் என்பது காரணமாக இருக்கலாம். பாவாடை தாவணியில் வந்த பெண்கள் ஜீன்ஸ், பேண்ட் அணிந்து வந்தவர்களை விட, வேகமாக ஓடினார்கள் என்ற செய்தி இதை ஊர்ஜிதப்படுத்துகிறது.

● ஆர். வானுமாமலைப் பெருமாள்,
தளக்கர்குளம்.

? ரஜினி அரசியலில் இறங்க தயக்கம் காட்டுவது ஏன்?

! இறங்குமுன் ஆழம் பார்க்கிறார். அது அவசியம்தானே?

● எம். திருஞானம், சீர்காழி.

? தியானேஸ்வரன் 'தொண்டைமான் பரம்பரை'யைச் சேர்ந்தவராம். பரம்பரை பணக்காரராமே... கேள்விப்பட்டீர்களா?

! அப்படியிருந்துமா இப்படி...! த்ஸ" த்ஸ"!

● கலை அரசு,
கோவை புதூர். ❑

? போலீஸ்காரர்கள் டயரி எழுத வேண்டும். சி.பி.ஐ. டயரி எழுத வேண்டும்.


• சொன்னது சரிதானா?...


• இடைக்காலத்...


• தடை!

